# இரவு வரவில்லை

கவிஞர்

வாணிதாசன்

விற்பனை உரிமை :

மனோன்மணி புத்தக நிலையம்

138-A, பவழக்காரத் தெரு, சென்னை-1

# உள்ளுறை

# என் உரை

நான் கவிதை எழுதத் தொடங்கிய நாளி லிருந்து இற்றை நாள் வரை எழுதிய கவிதை களில் இதுவரை வெளிவந்துள்ள கவிதை நூல்கள் ஒன்பதிலும் சேர்க்கப் படாமல் எஞ்சி யிருந்தவைகளைத் தேடித் திரட்டித் தொகுத்தும் வகுத்தும் மூன்று நூலாக உருவாக்கித் தந்தனர் என் கெழுதகை நண்பர்கள். அவற்றுள் 'சிரித்த நுணா' என்னும் நூல் அண்மையில் வெளி வந்துள்ளது. 'இரவு வரவில்லை' என்னும் இந்த நூல் இரண்டாவதாகும்.

இதிலுள்ள கவிதைகள் எல்லாம் அவ்வப் போது இதழ்களிலும், கவியரங்குகளிலும், பிற ரால் வெளியிடப்பட்ட நூல்கள் மலர்கள் ஆகிய வற்றிலும் வெளியாகித் தமிழ் கூறும் நல்லுல கத்து மக்களால் படித்துச் சுவைக்கப்பட்ட வையே யாகும்.

இதனை வெளியிட்ட ஐயை பதிப்பகத் தார்க்கும், விற்பனை உரிமை ஏற்றுள்ள மனோன்மணி புத்தக நிலையத்தார்க்கும் என் நன்றி!

—வாணிதாசன்.

# பதிப்புரை

தமிழ் மக்களின் வாழ்க்கை அகம், புறம் என்னும் இரு வகையுள் அடங்கும். அதனை விளக்கும் இலக்கியமே 'இரவு வரவில்லை' என்பதாகும். அக விலக்கணத்திற்கு ஓர் இலக்கியமாய் இலங்குகின்றது இதன் முதற் பகுதியான இன்பப் பகுதி. ஏனையவை புற விலக்கணத்திற்கு எடுத்துக்காட்டாய் இலங்குகின்றன.

'இரவு வரவில்லை' என்னும் பெயருடன் வெளிவரும் இந் நூல், கவிஞர் வாணிதாசரின் பன்னிரண்டாவது படைப்பாகும். இத்தொகுப்பு நூல் இன்பம், பூக்காடு, கையறு நிலை, பன்மணித் திரள் என்னும் நான்கு பகுதிகளைக் கொண்டு திகழ்கின்றது.

கவிஞர் பழமொழியை எடுத்தாளுந் திறன் தனிப் பேராற்றல் உடையதாகத் தோன்றுகிறது. 'காட்டிலே வரகு விளைஞ்சாலும் கல்லுரலுக்கு ஒரு நாள் வந்துதான் ஆகணும்' என வழங்கும் பழமொழி கவிஞர் வாக்கில்,

> **" காட்டோரப் புன்செயிலே வரகு விளைந் தாலும்**
> **கல்லுரலுக் கென்றேனும் வந்தாக வேண்டும்!"**

என உயிர் பெற்று ஒலிக்கின்றது.

'உனக்கேது காதல்?' என்ற தலைப்பில், 'நலங்கிள்ளிப் பையன் (கவிஞர் மகன்) மென்கொம்பு கையேந்தி விளையாடுவோரை அடித்தடித்துச் சிரித்திருப்பான்' என இயல்பு நவிற்சியாகக் கூறியுள்ள நயம் படித்துணர்வோர்க்குப் பேரின்பம் ஊட்டும்.

பழமொழியைப் போலவே கவிஞர் எடுத்தாளும் உவமைகள் யாவும் எளியனவே ஆகும்.

> **" நாள்விளக்க வருகின்ற வைகறையைப் போல**
> **நலம்விளக்க வந்தவளே ! விடிகாலை வானே !"**

என்னும் அடியில் தலைவியின் வருகைக்கு விடியற்காலையை ஒப்பிட்டுக் காட்டும் பேரழகைக் காணலாம்.

'எங்கிருந்தால் என்ன?' என்ற தலைப்பில், "நம் காதற்கு எல்லை அகல்வானும் நீள்கடலும் இவ்வுலகும் போதா!" என வரும் அடியானது சங்கத் தமிழையும் (குறுந்தொகை, 3) விஞ்சி விளங்குகிறது என்னலாம்.

'முல்லையும் வண்டும்' புதிய படைப்பு. 'விழியோ? அல்ல!' என்னும் தலைப்பில் அந்தாதித் தொடையாக அமைந்த கவிதை நயங்கள் கண்டு மகிழக் கூடியனவாகும்.

'நீ இல்லாச் சில நாட்களில்' சொல்லுக்குச் சொல் உவமை அழகு அமைந்து அழகுக்கு அழகு செயக் காண்கின்றோம்.

'முடியாதே' என்னும் தலைப்பில் அமைந்த பாடல்கள் 'இவரைப்போல் இவ்வளவு எளிமையாகப் பாடல் எவர்க்கும் முடியாதே!' என்பதையே காட்டுவனவாகும்.

கவிஞர் உள்ளத் துணிவும் அஞ்சாமையும் மிக்குடையவர் என்பதைக் 'காளையின் கடிதம்' என்னும் தலைப்பிலுள்ள வெண்பாவின் ஈற்றடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

'அவளில்லா வாழ்'வில் உண்மையும் கற்பனையும் உருவும் நிழலும்போல ஒன்றி நிற்பதைக் காணலாம்.

'கனவு ஒரு கானல்' என்னும் தலைப்பில் அமைந்த கவிதைகளைப் படித்துக்கொண்டே சென்றால், கவிஞர் நம்மை ஒரு கானலில் விட்டுவிட்டுப் போய்விடுகின்றார். அங்கிருந்து மீளுதல் பெருந் துன்பமாகவே உள்ளது.

'அதுவே போதும்!' கவிஞரின் உள்ளக் கிடக்கையை உரணக் கிடைத்த அரிய கவிதைக் கருவூலமாகும்.

**" எள்ளியெள்ளி எனைமாற்றார் பேசி னாலும்**
**எனதன்பர் புகழ்ந்தாலும் கவலை யில்லை !"**

இவ்வடி கவிஞரின் பற்றற்ற தன்மைக்கு எடுத்துக் காட்டாய் இலங்குகின்றது.

'காணி நிலம் வேண்டும்' என்றான் ஒரு கவிஞன். 'குணத்தாலும் உடலாலும் அழகு மிக்க குமரி எனை மணந்து இன்பம் கொடுக்க வேண்டும்' என்றான் மற்றொரு கவிஞன். "மக்கட்கு என்றும் நான் கொடுக்க என் வாழ்வாம் உயிரின் மேலாம் நல்ல தமிழ்ப் பாட்டுண்டே! அதுவே போதும்!" என்ற

அடிகளில், தமதாசான் பாவேந்தர் பாரதிதாசனார் காட்டிய அன்புள்ளம் — தாயுள்ளம் தழைக்கக் காட்டியுள்ளார் கவிஞர் வாணிதாசர்.

உள்ளத்தை நெகிழ வைத்து உடலை உருக்கி அறிவு ஒளியைப் பெருக்கும் ஆற்றல் உடைமையே தமிழ் மொழியின் தனிச் சிறப்பாகும். இரங்கலுக்கு எடுத்துக் காட்டாக உலக மொழிகளிலே இடம் பெற்றது தமிழ். காந்தியார், கலைவாணர், தருமாம்பாள், பிச்சையா, பாரிப் பாக்கம் கண்ணப்பர் ஆகிய ஐவர் பிரிவின் துயரால் எழுந்த கையறுநிலைக் கவிதைகள் இரங்கல் தமிழுக்கு எடுத்துக் காட்டாய் இலங்குகின்றன.

பக்கம் ஐந்தில் 'மான் பாய' என்றிருப்பதை 'மீன் பாய' என்றும், பதினேழில் 'மறைந்தாயோ' என்றிருப்பதை 'மறந்தாயோ' என்றும், இருபத்து நான்கில் 'மலர்ந்து' என்றிருப்பதை 'மலர்ந்தது' என்றும், இருபத்தொன்பதில் 'உயிர்கொடுத்தான்' என்றிருப்பதை 'உயிர்கொடுத்தாள்' என்றும், முப்பத்திரண்டில் 'விட்டாய்' என்றிருப்பதை 'விட்டாள்' என்றும், முப்பத்தொன்பதில் 'மெல்லிசை' என் றிருப்பதை 'மெல்லிடை' என்றும், நாற்பதில் 'மணைக்க' என்றிருப்பதை 'மணக்க' என்றும், நாற்பத்து மூன்றில் '5' என்றிருப்பதை '1' என்றும், ஐம்பத்தேழில் 'பகலெலாம' என்றிருப்பதை 'பகலெலாம்' என்றும், எழுபதில் 'வாகு யர்த்தி' என்றிருப்பதை 'வாடுலர்த்தி' என்றும், எழுபத் தேழில் 'பான்பிறந்த', 'மண்டிதமாமணி' என்றிருப்ப வைகளை 'வான்பிறந்த', 'பண்டிதமாமணி' என்றும் திருத்திப் படிக்க வேண்டுகிறோம்.

கற்பவர் இதயம் களிக்கும் வகையில் இதனைப் படைத் தளித்த கவிஞர் வாணிதாசனார்க்கும், விற்பனை உரிமையை விரும்பி ஏற்கும் மனோன்மணி புத்தக நிலையத்தார்க்கும் அன்பு கலந்த நன்றி.

—ஐயை பதிப்பகத்தார்.

# 1. இரவு வரவில்லை!

துணைபிரிந்த புட்களேன் கூடுவர வில்லை?
தொழுவத்தை மறந்தனவோ பசுமாட்டுக் கூட்டம்?
இணைமலரின் கட்டவிழ்த்தே இறுகணைக்கும் தேனீ
வரவில்லை! இன்னுமேனோ இரவுவர வில்லை?
அணையுடைத்துப் பாய்கின்ற காட்டாறு போல
அவளருகிற் பாய்ந்தோடும் நெஞ்சிற்கென் சொல்வேன்?
கணைவிழியாள், கனுக்கரும்பு, கவிதைத்தேன் ஊற்றைக்
கையாலே அணைப்பதற்கேன் இரவுவர வில்லை? 1

மாந்தளிரைப் போற்பனையை மாற்றுகின்ற வெய்யோன்
மலைமுகட்டில் வேகாது வெந்துதணி கின்றான்!
தீந்தமிழின் இடைவந்த கலப்புமொழி போலச்
செவ்வானை மிகவிரைவாய் விழுங்கவரும் கங்குல்
மாந்தோப்புக் குளிர்காற்றால் மயங்கியதோ? அன்றி
மறிகடலின் இடைச்சென்றே ஒளித்ததுவோ? காட்டுப்
பூங்குயிலை, என்னுயிரை, என்வாழ்வின் ஊற்றைப்
போய்த்தழுவ இன்னுமேனோ இரவுவர வில்லை? 2

கடமையே பெரிதெண்ணும் ஒன்றிரண்டு விண்மீன்
கண்சிமிட்டும்! மேல்வானில் கண்சிமிட்டும் வெள்ளி!
படைவெட்டித் தீந்தமிழின் பகைவெட்டிச் சாய்த்த
படுகளம்போல் வானெல்லாம் இரத்தப்பே ராறு!
நடைகட்டா திருப்பதென்ன செங்கதிரோன் இன்னும்?
நானின்பம் அடைவதிலே பிறர்க்கென்ன துன்பம்?
அடைபட்டுப் போனதுவோ மேற்றிசையிற் கங்குல்?
ஆருயிரை அணைப்பதற்கேன் இரவுவர வில்லை? 3

காடெல்லாம் அடங்கிற்று! காட்டோரம் பாயும்
நல்லருவி என்னைப்போற் காதலறி யாதோ?
வீடெல்லாம் அடங்கிற்றே! ஆனாலும், இந்த
வெய்யோனுக் கின்னமுமா அடங்கவில்லை வேலை?
கூடெல்லாம் அடங்கிற்று! கொம்பெல்லாம் வண்டின்
கும்மாளம்! வானெல்லாம் வயிரமணிக் குப்பை!
பாடெல்லாம் அவளுக்கே! என்னுயிராம் இன்பப்
பைந்தமிழைத் தழுவுதற்கோ இரவுவர வில்லை! 4

வந்துவந்து நச்சரிக்கும் என்னின்பச் சிட்டு
மாந்தளிராம் சிறுகுழந்தை அடங்கிற்றுப் பாயில்!
நொந்தலுத்த என்மனைவி நெய்யமுது வீட்டின்
அடுக்களையில் நுழைந்துவிட்டாள்! தனித்தென்னசெய்வேன்?
புந்தியிலே வெறியேற்றி என்னுடலை, ஊனைப்
புதுமைசெய்யும் பேரழகி, புனையவொண்ணாப் பாவை
வந்திருப்பாள் இந்நேரம்! ஓடோடிச் சென்று
வாரிச்சேர்த் தணைப்பதற்கேன் இரவுவர வில்லை? 5

தொல்லைபல எனக்களித்த பகற்பொழுது மேற்கில்
தொலைந்ததுவே! ஆனாலும், தொலையவில்லை அந்தி!
கொல்லன் உலை போல்மேற்குத் தொடுவானம் கண்டேன்!
குளிர்தென்றற் காற்றுக்குப் போக்கிடமா இல்லை?
மெல்லவரும் இரவுக்கோ இனியென்ன வேலை?
வெளிப்பரந்த செங்கதிர்கள் மேற்றிசையில் இன்னும்
தொல்லைசெய்யக் காரணமென்? நான்செய்த தென்ன?
தூயதமி ழைத்தழுவ இரவுவர வில்லை! 6

## 2. என்ன செய்வாய்?

தொலைவினிலே மணிப்புறவு குரல்கொடுக்கக் கேட்டேன்;
தொடுவானப் பசுந்தோப்பு நெடுமலைபோல் தோன்றும்
நிலைஎண்ணி உனைநினைந்து நின்றிருந்தேன்! வந்தாய்!
நிறைகுளத்துத் தாமரையில் ஞான்பாயக் கண்டேன்!
விலைஇல்லா ஓவியமே! வீசுமிளங் காற்றே!
வீணேஏன் முகம்மறைத்தாய்? கைச்சிறைக்குள் திங்கள்
கலையழகைப் பாழாக்கல் இங்குத்தான் கண்டேன்!
கனுக்கரும்பே குற்றாலம் சிரிப்பதற்கென் செய்வாய்? 1

வானத்து வெண்ணிலவு மரமடர்ந்த தோப்பில்
வந்ததுவே! 'இளம்பிடியோ? மயில்தானோ?' என்றே
நான்நினைத்துக் கொண்டிருந்தேன்; உனைநேரிற் கண்டேன்;
நடைகண்டேன்; விழிகண்டேன்! வேல்!வேல்!வேல்! வேலே
ஏனோநீ முகம்மறைத்தாய்? மலைபூக்கும் காந்தள்
தாமரையில் பூத்திருத்தல் இங்குத்தான் கண்டேன்!
தேனுளே! என்னுயிரே! என்இன்பக் கிள்ளாய்!
திருக்கும்ப கோணமதோ சிரிப்பதற்கென் செய்வாய்? 2

'இவ்வேளை எங்கிருப்பாய்? என்செய்வாய்?' என்றே
ஏதேதோ நான்எண்ணி ஏங்குகின்ற மாலை,
செவ்வல்லி தீச்சுடர்போற் குளத்தினிலே பூக்கும்!
சென்றடையும் வெய்யோனை நின்றிருந்து பார்த்தேன்!

---

* வல்லம்—ஓர் ஊர்.

அவ்வேளை நீவந்தாய்! மாவடுவோ? பூத்த
அழகியதா மரைகாய்த்தல் இங்குத்தான் கண்டேன்!
ஒவ்வாதே இச்செய்கை! முகம்மறைத்தல் கண்டே
உயர்வல்லம்* சிரிக்குதஃதோ! அதற்கென்ன செய்வாய்? 3

தேக்குநிறை மலைச்சாரல் சென்றலுத்து நின்றேன்;
சிற்றோடை நீரருந்தும் பிடிகண்டேன்; வந்தேன்;
பூக்காட்டு வண்டிரண்டு முழுமதியில் மொய்க்கும்
புதுமையினை நான்கண்டேன்; உனைக்கண்டேன்! என்ன
நோக்கத்தால் முகம்மறைத்தாய்? ஆனாலும், உன்றன்
நூலிடைக்கோ யார்காவல்? உயிர்பறிக்கும் அந்தப்
பூக்காத தாமரையின் இருமொட்டும் உன்றன்
போக்கெண்ணிச் சிரிப்பதற்கு நீஎன்ன செய்வாய்? 4

## 3. உனக்கேது காதல்?

என்வீட்டுச் சிறுசன்னல் வழிவந்து தென்றல்
இதழ்விரித்த முல்லையினைத் தூதாகப் போக்க
என்வீட்டாள் எனஎண்ணிப் படுக்கையிலே கையை
எடுத்துவைத்தேன்; தலையணைதான் அங்கிருக்கக் கண்டேன்!
தென்னவனின் தீந்தமிழை, என்னுயிரைக் காலைச்
சிட்டினங்கள் செவிபாய்ச்சும்! இதுவேஎன் காதல்!
என்மனைவி பின்வந்தாள்! 'காதல்' எனச் சொன்னேன்!
'உனக்கேது காதல்?' என என்னை இடித்துப் போனாள்! 1

தெருவினிலே அங்குமிங்கும் குரல்காட்டும் சேவல்!
தொடுவான நீள்பரப்பிற் செவ்வரிகள் பாயும்!
இருள்நழுவி வந்தவழி தெரியாமல் ஓடும்!
எதிர்உள்ள நீர்நிலைகள், மரங்கொடிகள், தோப்பு
பொருளுள்ளான் முகம்போலப் புதுப்பொலிவைக் காட்டும்!
பூரித்துப் போனேன்நான்! இதுவேஎன் காதல்!
சுருள்கூந்தல் என்மனைவி அருகினிலே வந்தாள்!
'காதல்' என்றேன்! 'உனக்கேது காதல்?' எனச் சொன்னாள்! 2

வயல்செல்லும் காளைகளின் நடைகண்டேன்; அந்த
மறக்காளை பின்செல்லும் நல்உழவர் கண்டேன்;
குயிலொன்று தொலைவினிலே பாட்டிசைக்கக் கேட்டேன்!
குளிரோடை, மரஞ்செடிகள் எங்கும்பூக் காடே!
செயலற்றேன்; வான்முகட்டில் தோன்றுகின்ற சாரற்
செழுமையினை நான்கண்டேன்! இதுவேஎன் காதல்!
கயல்விழியாள் என்மனைவி அருகினிலே வந்தாள்!
'காதல்' என்றேன்! 'உனக்கேது காதல்?' எனச் சொன்னாள்! 3

நடுப்பகலில் வளைந்துசெல்லும் மணற்பாட்டை தீய்க்கும்!
நறுக்கென்று நெருஞ்சிமுள் ஒன்றிரண்டு தைக்கும்!
துடுப்பைப்போற் காய்க்கின்ற சுரபுன்னைக் கொம்பில்
அணிற்பேடு துணைதழுவும்! இதுவேஎன் காதல்!
தடுப்பில்லா வாழ்க்கையே நான்விரும்பும் வாழ்க்கை;
தமிழ்வாழ்க்கை! இலையென்று யார்சொல்லக் கூடும்?
கடுப்போடு மனையாட்டி என்னருகில் வந்தாள்!
காதல்என்றேன்! 'உனக்கேது காதல்?'எனச் சொன்னாள்! 4

அந்தியிலே வீடடையும் ஆனிரையின் கூட்டம்!
அழகொளியைச் சிந்திவிட்டுப் போய்மறையும் வெய்யோன்!
புந்தியிலே வெறியேறும்! பொற்காசு மீன்கள்
துணைபிரிந்த புட்களுக்கோ ஒளிகாட்டி நிற்கும்!
வந்ததுவே பிறைநிலவும்! இதுவேஎன் காதல்!
வாய்பிளந்து பார்த்திருந்தேன்; என்மனைவி வந்தாள்;
நொந்திருந்தாள் எனஎண்ணிக் 'காதல்'எனச் சொன்னேன்!
'உனக்கேது காதல்?' எனநொடித்தொடித்துப் போனாள்! 5

என்வீட்டு வாயிலிலே சிறுகுழந்தைக் கூட்டம்
எழுந்தோடி நடமாடி ஏதேதோ பாடும்!
மென்கொம்பு கையேந்தி விளையாடு வோரை
அடித்தடித்துச் சிரித்திருப்பான் நலங்கிள்ளிப் பையன்!
பொன்னான விளையாட்டு! பிள்ளைக்கா பஞ்சம்?
புத்தின்பம் நானடைவேன்! இதுவேஎன் காதல்!
என்மனைவி 'உண்ணுதற்கு நினைவிலையோ?' என்றாள்!
'காதல்'என்றேன்! 'உனக்கேது காதல்'?எனச் சொன்னாள்! 6

ஊரெல்லாம் உறங்கிற்று! நான் உறங்க வில்லை !
ஒளிவிளக்கும் நானும்தான் தனித்தறையில் நின்றோம்!
காரெல்லாம் வானத்தில் தவழ்ந்திருக்கக் கண்டேன்!
கதவிடுக்கு மரக்கிளையில் காற்றின்கொண் டாட்டம்!

சீரில்லா நள்ளிரவே என்இன்பக் காதல்!
செந்தமிழாள் என்மனைவி அருகினிலே வந்தாள்!
'யார்?' என்றேன்! 'ஏன்?' என்றாள்! 'காதல்' எனச்
சொன்னேன்!
'உனக்கேது மெய்க்காதல்? யான்ஒப்பேன்!' என்றாள்! 7

## 4. துயர் அறிவாரோ தோழி?

ஊரெல்லாம் விளக்கேற்றி விட்டார்கள்; ஊரின்
மேற்றிசையில் உயர்வானில் உருள்கின்ற தட்டாம்
சீர்ப்பரிதி! செம்பொன்னாற் செய்தபெருங் குண்டு !
சென்றதிசை பார்க்கின்றார்; விளக்கைப்பார்க் கின்றார்;
கூரொளியைச் செங்கதிரைச் செங்கதிரின் வீழ்ச்சிக்
குளிர்வற்ற ஒளிப்பிழம்பில் அருகிவரும் செம்மை
நாரொத்த பொற்சுடரைப் பார்க்கின்றார் பெண்கள்!
நானடையும் துயரத்தை அறிவாரோ? தோழி! 1

வானத்தில் முழுநிலவு மெய் யெழுத்துப் புள்ளி
வந்ததடி! இன்னுமவர் ஊர்வந்தார் இல்லை!
சீனத்து வெண்பட்டு நிலவொளியிற் பெண்கள்
சிரித்தாடி மகிழ்கின்றார்! நிலவுதருந் தொல்லை
நானடைந்து சாகின்றேன்! அவர்க்கதனு லென்னும்?
'நலஞ்செய்யும் திங்க'ளென்றே இங்குள்ள மக்கள்
தேனொழுகப் பேசுகின்றார்! அதிற்குறைச்ச லில்லை!
அணுவணுவாய்ச் செல்லுதுயிர் அறிவாரோ? தோழி! 2

கீழ்த்திசையிற் கழிதாண்டி, மணற்பரப்பைத் தாண்டிக்
கிடக்கின்ற நெடுங்கடலும் இராமுழுதும், தோழி!
பாழ்செய்ய முனைந்ததுபோற் கொந்தளித்துச் சீறிப்
பாறையிடம் சண்டைக்கு வந்துவந்து பாயும்!
வாழ்வளிக்க வந்தவனால் மனத்துயரம் என்றால்
மற்றவர்கள் என்செய்வார்? மடமையதன் செய்கை!
தாழ்ந்த்செயல் தனித்திருந்திப் பிரிந்துசெலல் என்றால்
இங்குள்ள மக்களுக்கு வாய்நொந்தா போகும்? 3

சன்னலிடைக் குளிர்காற்று வைகறையில் வந்து
தழுவுதடி என்னுடலை; தன்னுடலிற் பாயும்
முன்னிரவும் பின்னிரவும் நள்ளிரவும் கண்கள்
மூடவில்லை? ஊர்சென்றூர்க் கிதைப்பற்றி என்ன?
தென்னையிலே, நொச்சியிலே சிறுபுள்ளின் பாட்டைச்
செவிகேட்க மறுக்கிறதே; விடிகின்ற காலை
என்னிலையை, என்னுயிரை, என்னுடலின் சோர்வை
இங்குள்ளார் அறிவாரோ? என்செய்வேன் தோழி! 4

## 5. ஆர் ஓலை விட்டார்?

வேலியிலே பூக்களெல்லாம் பூத்தனவே அத்தான்!
மேல்மொய்க்கும் வண்டுக்கார் தூதோலை விட்டார்?
கூலிக்குப் பெறுவதுவோ மாறுத காதல்?
குறிப்பறியார்க் கிவ்வுலகில் எதுதான்கை கூடும்?
போலிக்கு வரவேற்பாம் ஒன்றிரண்டு நாட்கள்!
பொன்னுருக்குப் பாய்கின்ற அந்திக்கு முன்னர்க்
காலிக்கு நீர்காட்டும் குளத்தினிலே அல்லி
கடைவாயிற் சிரிப்படக்கிக் காத்திருக்கக் காண்பாய்!

வானகத்து மேற்றிசையில் ஒளிமங்கிப் போச்சாம்!
வரச்சொல்லி விண்மதிக்கிங் கார்ஓலை விட்டார்?
கானகத்து மலைமுகட்டு மெல்லருவி என்றும்
கடல்தாவி வருவதன்றி வேறெங்கே போகும்?
போனதெலாம் போகட்டும்; வெள்ளியலை மோதும்
பூக்குளத்தின் நடுவினிலே தலைதாழ்த்திச் சோங்கி
ஏன்நிற்கும் தாமரையென் றெவரேனும் கேட்டால்,
என்னுயிரே! எனதத்தான்! ஏதுபதில் சொல்வாய்?

வீட்டோரத் தோப்பினிலே மரம்பழுத்த தத்தான்!
மேல்தாவும் அணிலுக்கார் தூதனுப்பி வைத்தார்?
காட்டோரப் புன்செயிலே வரகுவிளைந் தாலும்
கல்லுரலுக் கென்றேனும் வந்தாக வேண்டும்!
கூட்டோரம் அந்தியிலே பெண்புறவு கூவும்
குரல்கேட்டு யாரேனும் என்னென்று கேட்டால்,
மீட்டாத மெல்யாழ்க்கு விரலன்றி வேறு
எதுவேண்டும் என்றேனும் சொல்வாயோ அத்தான்?

## 6. எங்கிருந்தால் என்ன?

நாள்விளக்க வருகின்ற வைகறையைப் போல
நலம்விளக்க வந்தவளே! விடிகாலை வானே!
வாள்விளக்கும் உன்விழியை; முகம்விளக்கும் திங்கள்;
மயில்விளக்கும் உன்சாயல்; மலைமூங்கில் உன்றன்
தோள்விளக்கும் : காடடர்ந்த பசுங்கொடிகள் எல்லாம்
தோன்றாத இடைவிளக்கும்; பொய்கையிலே பூத்துத்
தாள்விளக்கும் தாமரைகள்; தளிர்விளக்கும் மேனி;
தமிழ்விளக்கும் உன்பேச்சை! எங்கிருந்தால் என்னும்? 1

கால்இழுக்கக் கடற்கரையில் நீள்தாழை யோரம்
கடுவெயிலில் துடிதுடித்தே என்னோடு வந்தாய்!
வேலொத்த விழிப்புருவம் வில்லைப்போற் கோணு
வேகாது வெந்ததுண்டு! மறப்பதுண்டோ நெஞ்சம்?
ஆல்தழைத்து வீழ்திறங்கி அரண்மனைபோல் நிற்கும்
மணல்மேடும், கழிப்பூவும், புன்னைமர மொட்டும்
மால்நிறைந்த உன்பேச்சை, விழி,பல்லைக் காட்டும்!
மலர்க்காடே! என்னுயிரே! எங்கிருந்தால் என்னும்? 2

அன்றொருநாள் நாமிருவர் ஆற்றோரம் குந்தி
அடர்நாணல் வெண்கதிரைச் செங்கதிராய் ஆக்கிக்
குன்றோரம் மறைகின்ற பைங்கதிரைக் கண்டோம்!
குளிர்புனலே! அதையெல்லாம் நான்மறந்தா போனேன்?
இன்றோநீ நெடுந்தூரம்! இருந்தாலும் என்னும்?
என்றைக்கும் நாமொருவர்! ஆற்றோரத் தோப்பில்
தென்றலுனை என்னருகிற் கொண்டுவந்து சேர்க்கும்!
செடிப்பூக்கள் உன்சிரிப்பே! எங்கிருந்தால் என்னும்? 3

†சுகம், பழுத்த வாழையிலே கொஞ்சுவதைக் கண்டேன்!
சொல்லுவதை யேசொல்லும் நீதானு கிள்ளை?
முகம்பழுத்த நெல்வயலின் பெருவெளியி னூடே
முன்பின்னுய் வரப்பேறி நாம்நடந்த காட்சி
அகம்பழுத்து விட்டதடி! நம்காதற் கெல்லை
அகல்வானும் நீள்கடலும் இவ்வுலகும் போதா!
நகம்பழுத்த முதுமையிலும், உயிர்போகும் போதும்
நானுன்னை யேகாண்பேன்! எங்கிருந்தால் என்னும்? 4

† சுகம் - கிளி.

## 7. மறந்து போ!

புள்ளினம் அடையும் கூட்டில்!
பொழுதுசென் றடையும் மேற்கில்!
கள்ளவிழ் மலரைத் தேடும்
கருவண்டு! வந்தாள் இல்லை!
பள்ளத்தில் உருண்டு பாயும்
அருவியின் பாட்டைக் கேட்டேன்;
'உள்ளமே! மறப்பாய்!' என்றேன்!
அவளையா மறக்கும் உள்ளம்? 1

மறந்துபோ என்து நெஞ்சே!
மலையொன் றும் முழுகி டாது;
பறந்துபோய் அவளைச் சுற்றிப்
படிகின்றாய்! கண்ட தென்ன?
முறையின்றி வேண்டாப் போழ்தில்
முன்தோன்றி இதழைக் காட்டி
மறைகின்றாள்! எனைவாழ் விக்கும்
மனமவட் கில்லை நெஞ்சே! 2

மருந்தொன்று கிடைத்தி டாதோ?
வாழ்வினில் துன்பம் இல்லை!
பெருந்தோப்பிற் குரல்கொ டுத்தாள்;
பிள்ளைபோல் உள்ளங் கொண்டாள்;
அருந்தென்றற் குளிர்க்கை நீட்டி
அணைக்கின்றாள்; எட்டித் தாவ
விரைந்தோடி மறைகின் றாளே!
வெறுத்துநீ மறப்பாய் நெஞ்சே! 3

அவளையே தேடித் தேடி
அலைந்தோடும் மடமை நெஞ்சே!
அவளின்றேல் உன்னால் ஒன்றும்
ஆகாதோ? கண்ட தென்ன?
குவளையிற் சிரித்தாள்! முல்லைக்
கொடியிடை இடையைக் கண்டேன்!
அவளில்லை எனினும், பின்ஏன்
அலைகின்றாய் பேதை நெஞ்சே? 4

வயல்வெளி திரிந்தேன் அந்த
மங்கையை மறப்ப தற்கே!
கயல்பாயும் குளத்தில் வந்தாள்;
கண்கண்டேன்; அவளைக் காணேன்!
அயலிருந் தழைத்தாள்; சென்றேன்!
அங்கவள் இருந்தால் தானே!
செயலற்றேன்; செய்வ தொன்றும்
அவளின்றேல் இல்லை நெஞ்சே! 5

வீட்டினில், விளக்கில், வானில்,
விரிகடற் பரப்பில், கற்றோர்
ஏட்டினில், பண்ணி யைந்த
இசையினில், குளத்தில், முல்லைக்
காட்டினில் அவளை யன்றி
வேறொன்றும் கண்டே னில்லை!
கூட்டிவா; வந்தால், உள்ளக்
குறைதீரும்; வாழ்வேன் நெஞ்சே! 6

## 8. முல்லையும் வண்டும்

முல்லை : வண்ண மலராம் கன்னியர்கள்
வாழும் சோலை இடைப்புகுந்து
கண்ணை முத்தி விழிமலர்த்திக்
காதல் இன்பம் பரிமாறிப்
பண்ணை மீட்டி இசைபெருக்கிப்
பாடிப் பாடி வருவண்டே!
பெண்ணாள் என்னோ டென்றென்றும்
பிரியா திருக்க மாட்டாயோ? 1

வண்டு : பொல்லா உலகம் இவ்வுலகம்!
பொதுமை ஏற்க இணங்காமல்
அல்லும் பகலும் உழைத்துழைத்தே
அகத்தைப் பேணல் கடனென்னும்
இல்லம் உண்டே! இல்லத்தில்
இன்பச் சிறுவர் பலருண்டே!
செல்வம் தேடி இல்லோம்பல்
என்றன் செயலாம்! மறந்தாயோ? 2

முல்லை : எட்டுத் திக்கும் பறந்தோடி
இனிக்க இனிக்க இசைபாடிக்
கட்டே இன்றித் திரிகின்றாய்?
காட்டுக் களாவே! கருவண்டே!
கட்டி யணைத்தே வாழ்வித்துக்
காதற் கதைகள் பலபேசி
விட்டுப் பிரிந்து செல்வதுவோ
மேலோர் செய்கை? வேண்டாவே! 3

வண்டு : ஊரை விட்டுச் செங்கதிரும்
உயர்குன் றடைந்தே பிரிகிறதே!
காரைக் கிழித்து வருமதியும்
காலை ஓடி மறைகிறதே!
சாரை போன்ற மலையருவி
தடங்கடல் ஓடிக் கரைகிறதே!
யாரை யாரே பிரியாத்தார்?
யானென் செய்கோ? கலங்காதே! 4

முல்லை : சுற்றி வந்து முணுமுணுத்துத்
தோளை அணைத்தே இதழ்சுவைத்து
நற்றாய் மறக்கச் செயல்மறக்க
இன்பம் தந்தாய் நல்வண்டே!
உற்றார் எனக்கே உனையன்றி
உளரோ சொல்லேன்? என்றென்றும்
வற்றா இன்பம் தந்தென்னை
வாழ வைக்க மாட்டாயோ? 5

வண்டு : உன்னோ டிணைந்தே வாழ்ந்திருக்க
உள்ளம் உண்டு! மனையாட்டி
சின்ன மக்கள் பொறுப்பாரோ?
அண்டை அயலார் சீறாரோ?
என்ன செய்ய? நம்வாழ்க்கை
இதுதான்! இதுதான்! ஒருபோதும்
என்னை யன்றி நீவாழாய்!
அறிவேன்! என்றும் மறவேனே! 6

## 9. விழியோ? அல்ல! அல்ல!

தேனடை தொங்கும் மலையோரம்,
செறிந்த வாழைக் குலையோரம்
மான்போல் வந்து சிரித்தாளின்
மலர்விழி இரண்டும் கருவண்டே!

மான்போல் வந்து சிரித்தாளின்
மலர்விழி இரண்டும் கருவண்டே?
ஊனில், என்பில் உள்ளுறையும்
உயிரைப் பிரிக்கும் பெருந்தண்டே! 1

அல்லி சிரிக்கும் குளத்தோரம்,
அடர்ந்த ஆல மரத்தோரம்
மெல்லச் சிரித்து நடந்தாளின்
விழியோ குளிர்ந்த கருநீலம்!

மெல்லச் சிரித்து நடந்தாளின்
விழியோ குளிர்ந்த கருநீலம்?
அல்ல; அல்ல; உயிர்வாட்டும்
ஆறடி நீளக் கொடுஞ்சூலம்! 2

செந்நெல் விளையும் வயலோரம்,
சிறுசெடி பூத்த களத்தோரம்
அன்னம் பழிக்க நடந்தாளின்
அழகு விழியோ கருங்குவளை!

அன்னம் பழிக்க நடந்தாளின்
அழகு விழியோ கருங்குவளை?
என்னுயிர் மாய்க்க நல்லுணவில்
இட்ட நச்சுப் பெருங்குவளை! 3

வற்ரு ஏரிக் கரையோரம்,
மலர்ந்த பொய்கைத் துறையோரம்
சுற்றி வந்து சிரித்தாளின்
சொக்கு விழிகள் மாவடுவே!

சுற்றி வந்து சிரித்தாளின்
சொக்கு விழிகள் மாவடுவே?
பெற்ற உடலை, நல்லுயிரைப்
பிரிக்க வந்த பெருங்கடுவே! 4

ஓடும் ஆற்றங் கரையோரம்,
உயர்ந்த நாணல் தரையோரம்
பாடுங் குயில்போல் வந்தாளின்
பார்வை இரண்டும் தாமரையே!

பாடுங் குயில்போல் வந்தாளின்
பார்வை இரண்டும் தாமரையே?
நாடும் ஒவ்வா திவ்வுவமை!
நற்றீக் குறையே! பெருநரையே! 5

# 10. நீ இல்லாச் சில நாட்கள்

நீஇல்லாச் சிலநாட்கள் †வீயில்லாச் சோலை!
நீரில்லா மலர்ப்பொய்கை! நிழலில்லாப் பாட்டை!
தீயில்லாக் குளிர்காலம்! சீரில்லாப் பாடல்!
திக்குத்திசை இல்லாச் செழுங்காடு போலாம்! 1

நீஇல்லாச் சிலநாட்கள் சேயில்லா வீடு!
நெடுங்கடலின் மணற்காடு! நெஞ்சள்ளாப் பேச்சு!
தாயில்லா இளங்கன்னி! தமிழில்லா ஆட்சி!
தம்பிஇல்லா அண்ணன்! தலைவனில்லாப் படையாம்! 2

நீஇல்லாச் சிலநாட்கள் நினைவில்லாப் பாடல்!
நிலவில்லாப் பெருவானம்! கழியில்லா நெய்தல்!
தீயில்லா வைகறையே! தென்றலில்லா மாலை!
தெளிவில்லா நெஞ்சத்தான் விளக்கத்தைப் போலாம்! 3

நீஇல்லாச் சிலநாட்கள் வேயில்லாச் சாரல்!
நீரோடாப் பேராறு! நெல்விளையாச் சிற்றூர்!
காயில்லாப் பழத்தோப்பு! கண்ணில்லாப் பெண்டிர்!
காற்றில்லாக் கொடுங்கோடைக் காலத்தைப் போலாம்! 4

---

† வீ - மலர்

## 11. சிரித்தாளே!

குட்டை நிறைந்தது ஊரோரம்!—பூத்த
குளத்துச் சிரித்தது தாமரையும்!
அட்டிகைப் பொன்மணி மீனினங்கள்—வர
அணைத்துத் தழுவிச் சிரித்தாளே! 1

வானம் இருண்டது கீழ்வானில்!—பூக்கள்
வாயுள் சிரித்து மகிழ்ந்தனவாம்!
போன இடமெங்கும் வந்துநின்றாள்—கண்டு;
பூரித்தாள்; நின்று சிரித்தாளே! 2

காளை முழக்கிற்று வீட்டோரம்!—நாகு
கட்டை அறுத்துக் கிளம்பியது!
தாளை விலக்கிக் கடைதிறந்தேன்!—என்னைத்
தாவி அணைத்தாள்; சிரித்தாளே! 3

தீந்தமிழ் பாடிற்று நீளோடை!—குளிர்
தென்றல் அணைத்தது நாணலெலாம்!
பூந்தளிர் அந்தித் தீயொளியின்—செம்மை
பூத்தது! வந்தாள்; சிரித்தாளே! 4

இன்பத் தமிழ்ப்பாடல் இளஞ்சிறுவர்—ஆடும்
இரைச்சல் அடங்கிற்று வீட்டினிலே!
துன்பம் மறந்திட நூலெடுத்தேன்—ஓடித்
தோட்புறம் வந்தாள்; சிரித்தாளே! 5

பிள்ளை பலபெற்ற இல்லாளும்—உடன்
பேச மனமின்றித் தூங்கிவிட்டாள்!
உள்ளக் கவலை நினைந்திருந்தேன்!—என்முன்
ஓடோடி வந்தாள்; சிரித்தாளே! 6

சிரித்தாள்; சிரித்தேன்; செயல்மறந்தேன்!—என்
சிந்தையைக் கௌவிப் பறந்துபோனாள்!
இரவும் பகலும் அவளில்லை—என்றாலோ
என்னால் எதுவும் இயலாதே! 7

## 12. பக்கத்தில் நீ இல்லை!

செக்கச் சிவந்தது மேற்குவானம்!—ஒளி
சிந்திப் பரந்தது தங்கவொளி!
பக்கத்தில் நீஇல்லை என்றாலே—தோன்றும்
காட்சியைப் பார்க்க முடியவில்லை! 1

அந்தி மயங்கிற்று! சின்னஇருள்—அடி
வானம் விழுங்கிற்றுக் கீழ்த்திசையில்
சிந்திய பொன்மலர் மீனினம்—பக்கத்தில்
நீஇல்லை என்றாற் சிரிப்பதில்லை! 2

கத்திப் பறந்தது தனிநாரை!—மீண்டும்
காடு திரும்பிற்றுப் பேடையுடன்!
புத்தொளி வந்தது! பக்கத்தில்—நீஇல்லை!
பூத்த நிலாவெறுப் பேற்றுதடி! 3

முல்லை மலர்ந்து கொல்லையிலே—நாற்றம்
மூலை முடுக்கும் நிரம்பியது!
கல்லிடைப் பாயும் நீள்அருவி—பக்கம்
நீஇல்லை என்றால் கசக்குதடி! 4

வெள்ளி மெருகேறி நீர்நிலைமேல்—தென்னை
மெல்ல அசைந்திடும் தென்றலிலே!
பள்ளத் தவளை மணிக்குரலும்—நீஎன்
பக்கத்தில் இல்லை! வாட்டுதடி! 5

## 13. முடியாதே!

பாய்ந்தோடும் ஓடையில் தாமரைப்பூ—என்னைப்
பார்த்துச் சிரித்ததே; உன்னைக் கண்டேன்!
தேய்ந்த நிலவல்ல நீயெனக்கே!—உன்னைத்
தேடா திருக்க முடியாதே! 1

குட்டையில் தேங்கிய பாசியின்மேல்—நீலம்
எட்டிச் சிரித்ததே; உன்னைக் கண்டேன்!
விட்டுப் பிரிந்தாலும், பேரழகே!—உன்னை
விட்டுப் பிரிய முடியாதே! 2

வீட்டு முருங்கையிற் பச்சைக்கிளி—கூச்சல்
போட்டுப் பறந்ததே; உன்னைக் கண்டேன்!
நாட்டைக் கடந்தே இருந்தாலும்—உன்னை
நான்விட்டு நீங்க முடியாதே! 3

மேய்ந்தோடி வந்தது பெட்டைக்கோழி—அதன்
'மென்னடை கண்டேன்; உன்னைக் கண்டேன்!
காய்ந்த வெளியல்ல நீயெனக்கே!—உன்னைக்
காணு திருக்க முடியாதே! 4

பாண்டத்து வெண்ணெயைப் போலநிலா—ஒளிப்
பாலை உருட்டிற்றே; உன்னைக் கண்டேன்!
நீண்ட தொலைவில் இருந்தாலும்—உன்னை
நினைக்கா திருக்க முடியாதே! 5

## 14. வாராயோ

இதுநல்ல நேரம்! என்னை யறியாமல்
மதுநாறும் பூக்கள் மலர்ந்த தழைக்காட்டில்
புதுவுலகம் நோக்கிப் போகின்றேன்! வாராயோ?'
அதோபார், நிலவும் எனையழைக்க வந்ததுவே! 1

கூச்சல் அடங்கிற்று! கூட்டிலோ புள்ளின்
கீச்சொலியும் இல்லை! கிளையடர்ந்த தோப்பிற்
பேச்சின்றிப் புத்துலகம் போகின்றேன்! வாராயோ?
ஆச்சென் றெனைநிலவும் அழைக்க உயர்ந்ததுவே! 2

மாலைப்பூ நாற்றத்தைத் தென்றல் வரவேற்கும்
ஓலை கொடுத்தறியா ஊருக் கழைக்குதடி!
கோலஞ்சேர் புத்துலகம் போகின்றேன்! வாராயோ?
ஆலமரத் தோப்புள் அழைக்கநிலா வந்ததுவே! 3

மாசில்லா வானத்தைப் போலே பெயரறியாப்
பேசும் புதுவுலகம் பெரியதடி! வாராயோ?
ஊசல் உலகமிது! புத்துலகோ இன்பமயம்!
பாசிக் குளத்தில் நிலவழைக்க வந்ததுவே! 4

பச்சை வயற்காடும், பழுத்த நிலப்பரப்பும்
இச்சை பெருக்குதடி! ஏகுவோம்! வாராயோ?
பிச்சை உலகமிது! பேசா உலகமது!
உச்சிக் கெனையழைக்க நிலவோடி வந்ததுவே! 5

ஊரெல்லாம் தூங்கிற்(று)! ஓடையோ தூங்கவில்லை!
பேரறியாப் புத்துலகம் பேசச் சலிப்பதில்லை!
வாராயோ? போனால் துன்பம் மறந்திடலாம்!
யார்நம்மைக் கேட்பார்? அதோநிலவு வந்ததுவே! 6

கட்டில்லை! நெஞ்சிற் கவலை முளைப்பதில்லை!
எட்டியெட்டிப் போக எண்ணச் சுழலினிலே
மட்டில்லா இன்பம் வழங்கும் புதுவுலகம்!
வட்டநிலா அழைக்க வந்ததடி! வாராயோ? 7

## 15. காளையின் கடிதம்

*ஊரார் அலர்தூற்ற, உற்ருர் பகைக்கக்,கண்*
*நீர்பெருக்கி நீவாட வேண்டாவே!—காராடும்*
*வானம் இடிந்தாலும், வாளெடுத்து வந்தாலும்*
*நானெதிர்ப்பேன் ! நம்பி இரு!* 1

*சாதிக் குறைசொல்லித் தட்டிக் கழித்தாலும்*
*வாதாடி வந்துன்னை நானடைவேன்!—காதின்*
*குழைமின்னல் கண்டு குயில்பாயுஞ் சோலை*
*அழகே!நீ அஞ்சா திரு!* 2

*தாலி இழந்தாளைத் தாலிகட்டி இற்பேணல்*
*'ஏலா' தெனப்பெற்ருேர் ஏசிடினும்,—வேலி*
*நறைகமழ் பூங்கூந்தல் நங்காய்! மணப்பேன்!*
*குறைகூறு வார்கூ றுக!* 3

# 16. அவளில்லா வாழ்வு!

எங்கிருந்தோ வந்தாள்; உயிரில், எனதுடலில்
தங்கினாள்; தங்கிற்று நீளின்பம்!—சங்குக்
கழுத்தாள்; கதிர்நிலா; கார்மயில்; நெஞ்சை
இழுக்கும் இசைத்தமிழ்த் தேன்! 1

வந்தாள்; அவள்யாரோ? மல்லிகைப்பூங் கொத்து!
சொந்தப் பொருளானாள்; தீந்தமிழ்!—இந்த
உலகிற் கவள்வேறு சாதி; எனினும்,
மலர்க்கா டெனக்கவ ளாம்! 2

பூவொத்த கண்கள்; உடலோ குளிர்தென்றல்;
தாவிவரும் கிள்ளைத் தமிழ்ப்பேச்சு!—கோவை
இதழாள்; இரண்டாண்டின் முன்னோர்நாள் வந்தாள்;
புதுப்புனல் ஓடை யவள்! 3

பால்கொடுத்தாள்; என்பால் உயிர்கொடுத்தாள் அன்பால்
சேல்விழியை, மூங்கில் திருக்கையை,—நூலாம் [தன்
இடையை எனக்களித்தாள்; இன்பம் அளித்தாள்;
கடைச்சங்கத் தீந்தமிழ்ப் பாட்டு! 4

சாய்ந்தாள் எனதுடல்மேல், சங்கத் தமிழ்ப்பாட்டில்
தோய்ந்த சுவைபோலத் தோய்ந்தாளே!—காய்ந்தநிலா
இல்லா விரிவான்போல் இல்லாத தாகுமே
நல்லாள் அவளில்லா வாழ்வு! 5

## 17. அவளும் நானும்

விண்தொடு மலைப்பூஞ் சாரல் மேனியாள்!
விளைந்த மூங்கில் தேனடைச் சொல்லாள்!
வண்ணக் குறிஞ்சி மலரவள்! நான்மணம்!
வளைந்த அருவியும் நெய்தலும் போலுமாம்! 1

நகைத்த முல்லை! நன்னீர்க் கேணி!
நளிர்புனல் ஓடை! நன்னெறி வெண்பா!
புகையும் எரியும் அவளும் நானும்!
பொன்னும் பொடியும் கலந்தது போலுமாம்! 2

குவளை விழியாள்! குறுந்தொகைப் பாடல்!
குளிர்பூந் தென்றல்! குட்டைப் புதுமலர்!
அவளும் நானும் ஆறும் நீரும்!
அலர்ந்த பூவும் மதுவும் போலுமாம்! 3

பாலைப் பாடல்! ஆவிரைப் புதுமலர்!
பாரதி தாசன் குடும்ப விளக்கு!
மாலைப் புறவு அவளும் நானும்!
வறண்ட பாலை மணலும் போலுமாம்! 4

படரும் முழுநிலா! பசுந்தா ழம்பூ!
பண்ணோ டமைந்த நெய்தற் கலியாம்!
கடலும் கரையும் அவளும் நானும்!
கழியும் நீலமும் போலுமாம் வாழ்வே! 5

## 18. கேட்டதுண்டோ?

முல்லை நறுங்கொடியே!—உன்னிடம்
சொல்லவா? வேண்டாமா?
நல்லது என்பாயோ?—என்காதல்
எள்ளிச் சிரிப்பாயோ? 1

நீரை மறந்த மீன்கள்,—வெண்
நிலவை மறந்த அல்லி,
காரை மறந்த செந்நெல்—எங்கேனும்
கண்டது கேட்டதுண்டோ? 2

சேவல் மறந்த பெட்டை,—குளிர்
தென்றல் மறந்த மக்கள்,
கோவை மறந்த கிள்ளை—எவரேனும்
கூறத்தான் கேட்டதுண்டோ? 3

கடலை மறந்த ஆறு,—நீள்
கழியை மறந்த நாரை,
சுடரை மறந்த திங்கள்—எவரேனும்
சொல்லிநீ கேட்டதுண்டோ? 4

தேனை மறந்த வண்டு,—நீலவான்
செல்ல மறந்த நிலவு,
வானை மறந்த வெய்யோன்—எங்கேனும்
பார்த்தது கேட்டதுண்டோ? 5

காதல் வெறியை யேற்றி—என்
கண்ணிற் கலந்து விட்டாய்!
சாதல் அழைக்கும் போதும்—அவளைச்
சற்றும் மறவேனே! 6

## 19. உண்டோ தோழி?

பந்தர் படர்ந்த பசுங்கொடி முல்லை
நகுமே தோழி! அவர்வரக் காணேன்!
சாய்மரக் கிளையில் அமர்ந்துகால் ஆட்டி
வேய்குழல் இடைமகன் வாய்வைத் தூதப்
பாய்புனல் இடிகரை பசுவொடு காளை 5
மேயும் ஊரன் மேன்மையை எண்ணிப்
போய்வந் தனனே குறியிடம்!
உண்டோ விழிகள் பண்டைய நிலையே! 8

## 20. அவனினும் கொடியள்!

குன்றெதிர் ஒலிக்கும் குளிர்பூஞ் சாரல்
மரத்தைச் சுற்றும் மலர்க்கொடி கண்டும்
தாழ்கிளை தாவித் தலைகீழ் ஆடும்
குட்டிக் குரங்கைக் கிட்டும் மந்தியைத்
தழுவிக் கடுவன் தலைபார்த் திருக்கும் 5
நெடுவழி திரும்பாக் கரும்புனல் நாடன்
கொடியனில் கொடியன் தோழி!
அவனினும் கொடியள் உயிர்வாழ் வோளே! 8

## 21. ஓடோடி வந்தாள்!

வானம் இருண்டது!
மாமழை தூறிற்று!
மாங்குயில் ஓடோடி வந்தாள்!—காலை
வானெழில் ஓடோடி வந்தாள்!
ஏனல் முதிர்ந்தது!
எங்கும் பசுங்காடு!
இனக்கிளி ஓடோடி வந்தாள்!—தமிழ்
இசைப்பாடல் ஓடோடி வந்தாள்! 1

ஓடை முழக்கிற்று!
உயர்நாணல் ஆடிற்று!
ஓவியப் பேரெழில் வந்தாள்!—சுவைக்
காவியம் ஓடோடி வந்தாள்!
காடு தழைத்தது!
கழனி விளைந்தது!
கார்மயில் ஓடோடி வந்தாள்!—சங்கக்
கலித்தொகை ஓடோடி வந்தாள்! 2

குட்டை நிரம்பிற்று!
கொடிஅல்லி பூத்தது!
குளிர்தென்றல் ஓடோடி வந்தாள்!—இன்பக்
குளிர்தென்றல் ஓடோடி வந்தாள்!
பொட்டல் குளிர்ந்தது!
புட்கள் இசைத்தன!
போனவள் ஓடோடி வந்தாள்!—தமிழ்ப்
புறப்பாடல் ஓடோடி வந்தாள்! 3

கொல்லை முளைத்தது!
கூண்டுகள் தோன்றின!
கூன்பிறை ஓடோடி வந்தாள்!—புதுக்
குடும்ப விளக்கோடி வந்தாள்!
முல்லை படர்ந்தது!
முட்செடி பூத்தது!
முழுநிலா ஓடோடி வந்தாள்!—நம்
முத்தமிழ் ஓடோடி வந்தாள்! 4

வாழை பழுத்தது!
மாபலா காய்த்தன!
மாமணி ஓடோடி வந்தாள்!—நல்
மணமலர் ஓடோடி வந்தாள்!
தாழை மலர்ந்தது!
தடங்கடல் பாடிற்று!
தங்கச் சிலையோடி வந்தாள்!—நம்
சங்கத் தமிழோடி வந்தாள்! 5

## 22. பிரிவு

சோலைக் கலகலப் பெல்லாம்—அடடா!
சொரியும் உன்சொல் இன்பம்!
சுருதி மீட்டும் வண்டோ—எனக்குச்
சொல்லும் உன்வாய்ப் பாட்டை!
காலைச் சிலுசிலு காற்றில்—உன்றன்
கையின் அணைசுகம் காண்பேன்!
காலைக் கதிரின் ஒளியில்—உன்றன்
களைசேர் முகமே காண்பேன்! 1

குட்டை பூத்த மலர்கள்—உன்றன்
குளுமைச் சிரிப்பைக் காட்டும்!
குளத்துக் கெண்டை மீன்கள்—உன்றன்
குறுகுறு விழியைக் காட்டும்!
சுட்டும் கன்னச் சுழிப்பை—நீரில்
சுழலும் கரிய வண்டும்!
சொல்லும் முருங்கை மொட்டும்—உன்றன்
சொக்கும் பல்லின் எழிலை! 2

பட்டப் பகலின் வெயில்போல்—நெஞ்சைப்
பற்றித் தீய்க்குமுன் பிரிவு!
பழைய நினைவோ என்னுள்—நீரில்
பாய்ச்ச முன்னெழு நெட்டி!
சொட்டும் உடலின் வியர்வை—உன்றன்
சோர்ந்த விழிநீர் ஒக்கும்!
சொட்டைச் சொல்லிச் சிரித்த—அந்தச்
சொல்லென் காதில் ஒலிக்கும்! 3

அந்தி அழகில் வானம்—உன்னை
அண்டா நாள்நினை வூட்டும்!
அடிவான் மங்கும் செம்மை—ஊடல்
அலைக்கும் உன்முகத் தோற்றம்!
முந்திப் பரிந்து நானே—உன்றன்
முடக்கைத் தீர்த்தா லன்றி
'முகத்தைத் திருப்பேன்' என்பாய்!—உன்றன்
முகம்நான் காண்ப தென்றோ? 4

ஒளியை விழுங்கும் இருள்போல்—என்றன்
உயிரை விழுங்குதுன் பிரிவே!
உலகம் களிக்க இரவில்—வானில்
ஊரும் மதிநீ எனக்கே!
எளியேன் உன்னை நீங்கி,—அந்தோ!
எத்தனை நாட்கள் வாழ்வேன்?
எங்கும் நிறைபேர் எழிலே!—வாழ்வில்
எவ்வழி வந்துனைச் சேர்வேன்? 5

## 23. என்ன முழுகிவிடும்?

வட்ட நிலவுகண்டால்—அதிலுன்
வாள்முகம் தோன்றாதோ?
எட்டி எனைப்பிரிந்தே—சென்றால்
என்ன முழுகிவிடும்? 1

மங்கையுன் வாள்விழியை—வீரன்
வாள்நுனி காட்டாதோ?
இங்கெனை நீவிடுத்தே—சென்றால்
என்ன முழுகிவிடும்? 2

மொட்டு வரிசையெல்லாம்—உனது
முத்துப்பல் தோன்றுதடி!
விட்டுப் பிரிந்துசென்றால்—தமிழ்வெறி
விட்டுப் பிரிந்திடுமோ? 3

மின்னல் தவழ்ந்து வந்தால்—அதிலுன்
மெல்லிடை காணேனோ?
என்னைப் பிரிந்துசென்றால்—உலகில்
என்ன முழுகிவிடும்? 4

சங்க இலக்கியமும்,—தமிழ்வீரம்
சாற்றும் புறப்பொருளும்
இங்கே இருக்குதடி!—நீபோனால்
என்ன முழுகிவிடும்? 5

நெஞ்சுருக்கும் குயிலில்—உனது
செஞ்சொல்லைக் கேளேனோ?
வஞ்சித்தெனைப் பிரிந்தால்—கடலென்ன
வற்றித்தான் போய்விடுமோ? 6

## 24. இதுவல்ல வேளை!

உண்ணுதற்குப் பொருள்தேடிச் சென்றுரோ? இல்லை!
உனைமணக்கப் பொருள்தேடிச் சென்றுரோ? இல்லை!
பெண்ணரசி! என்தலைவி! உன்றமிழை, நாட்டைப்
பிறர்க்கடிமை ஆக்கவரும் இந்தியினை வெட்டி
மண்ணேடு மண்ணுக்கப் புறப்பட்டுப் போனுர்;
வந்திடுவார் கலங்காதே வாகைமலர் சூடி!
பெண்ணெல்லாம் கோழைகளோ? உயிரன்றே நாடு?
பிரிவெண்ணி வாடாதே! இதுவல்ல வேளை! 1

அன்றொருநாள் உனைத்தேடி நள்ளிரவில் வந்தார்;
அடர்கிளையிற் புள்ளெழுப்பி உன்வரவுக் காக
நின்றிருந்தார் தோட்டத்தில்! உனைக்கொண்டுவிட்டேன்!
நிலைதெரியாக் குடியரைப்போற் கூத்தடித்தீர்! கண்டேன்!
இன்றுன்னை மறப்பாரோ? போடி, போ, பேதாய்!
இன்றமிழை உன்நாட்டைக் குலைக்கவரும் இந்திப்
புன்மொழியைப் புறங்கண்டு வந்துன்னைச் சேர்வார்!
பிரிவெண்ணிக் கலங்காதே! இதுவல்ல வேளை! 2

தைபிறந்து விட்டதடி! ஊரெல்லாம் இன்றே
தடபுடலே! என்சொல்வேன்! பொங்கலடி பொங்கல்!
மைவிழிகள் நீர்சிந்த மாலைவரச் சோங்கும்
தாமரையைப் போலுனது வாட்டமுகம் கண்டேன்!
நெய்விளக்குச் சுடர்போலத் தமிழர்திரு நாளில்
நிலைகுலைந்தாள் என்தலைவி! கோழைகளா பெண்கள்?
உய்வதற்கு நாமெல்லாம் தமிழுய்ய வேண்டும்!
உயிர்த்தலைவர் பிரிவெண்ண இதுவல்ல வேளை! 3

## 5. கனவு ஒரு கானல்!

என்அன்னை சிற்றூராள்! எழுதாத பாடல்!
இல்லறத்தின் வழிகாட்டி! புகழ்ச்சியில்லை! உண்மை!
மின்னலிடை தேயாத வெண்மதியம்! நீங்கள்
விரும்புகின்ற என்பாட்டின் ஆதியவள்! அந்தத்
தென்னவளைத் தீந்தமிழை என்னுயிரை அன்பைச்!
சிறுவயதில் நானிழந்தேன்! ஆனாலும், அந்த
முன்னவர்கள் தீந்தமிழை மறக்கவுமா கூடும்?
முழுநேரம் அவள்கனவே! கனவும்ஒரு கானல்! 1

'என்தந்தை, என்தந்தை, என்தந்தை' என்றே
எழுதுகின்ற வேளையிலும், எண்ணுகின்ற போழ்தும்
தென்னவர்கள், தமிழ்காத்த சிறுத்தையின மக்கள்
தெரிகின்றார்! ஆனாலும், என்தந்தை போல
அந்நாளில் இருந்தாரோ என்கின்ற ஐயம்
அகத்திலெழும்; அவர்பேச்சோ என்காதில் கேட்கும்!
எந்நாளும் என்னருகில் ஏதேதோ பேசி
இருப்பதைப்போல் கனாக்காண்பேன்! கனவும்ஒரு கானல்! 2

இளவயதில் தாயற்றுத் தத்தளித்த போழ்து
யார்யாரோ எனைத்தூக்கிச் சிரிப்பூட்டப் பார்த்தார்!
தளதளத்த என்பாட்டி 'அம்மாயி' என்றன்
தனிச்சொத்து! நானவளின் தணியாத காதல்!
உளத்தினிலே குடியேறிப் போனஅவள் காட்சி
உயிர்பிரியும் வேளையிலும் நான்மறக்க மாட்டேன்!
வளர்த்தஅவள் எனைப்பிரிந்தாள்! அவளன்புச் சாயல்
மாறாத பெருங்கனவு! கனவும்ஒரு கானல்! 3

## 2. எழுத்தாளர் கடமை

நாட்டினை விளக்கும் வற்ரு
நல்லாறு போல என்றும்
பாட்டினால், உரையால், நல்ல
பண்பட்ட கருத்தால், சொல்லால்
தீட்டுக எழுத்தை! நாட்டைத்
திருத்துக! எழுத்தின் வன்மை
காட்டுக! இதுவே நம்மோர்
கடமையாம்! இனிது வாழ்க!

# 3. கார்த்திகை விளக்கு

மேற்றிசையிற் பிறந்தவந்தக் கொசுவின் கூட்டம்
மெல்லமெல்ல நம்நாட்டின் ஆசை தூண்டக்
காற்றூடே கலந்துவந்து அடிமை யற்றுக்
கண்ணயரும் தமிழ்மக்கள் காதிற் பாடிக்
கூற்றுவன்போல் உடல்கடித்து உதிர முண்ணும்
கொடுமையைத்தான் எத்தனைநாள் பொறுப்பார் மக்கள்?
ஏற்றிவிட்டார் தமிழ்ப்பெண்கள் தங்கள் இல்லம்
எங்கணுமே எண்ணில்லா அறிவுத் தீபம்! 1

கார்த்திகைநல் நாள்மூன்றும் எரியும் அந்தக்
கவரொளியிற் கொசுக்கூட்டம் வீழ்ந்து மாயும்
நேர்த்தியைநான் என்சொல்வேன்? உலகம் ஒன்றாய்
நின்றிடினும் அறிவின்முன் தலைகாட் டாது!
கார்த்திகையின் விளக்குப்போல் நாடு தோறும்
கற்றவர்கள் மிகுந்திடிலோ களிப்பே பொங்கும்;
சீர்த்திமிகும்; சாதிமதச் சிக்கல் நீங்கும்;
செழுமைதங்கும்; சமரொழியச் செய்யுந் தானே! 2

# 4. அடங்கா ஆவல்!

காட்டாறு பாயுமந்தச் சலச லப்பிலே,
கயல்புரளும் நாணல்நிறை மணற்ப ரப்பிலே,
மீட்டுமந்தக் குயிலினத்தின் இசைச்சு ழலிலே
வேண்டுமின்பம் அடைந்திடுவேன் இப்பு வியிலே! 1

விரியுலகக் கடல்குளித்து முத்தம் எடுப்பேன்;
விதவிதமாய்ச் செப்பனிட்டுத் தந்துக ளிப்பேன்;
புரியூதி என்நாட்டார் விடுதலை வாழ்வைப்
பூரணமாய்ப் பெறச்சொல்லி முரசு கொட்டுவேன்! 2

முழுமதியாய் அறிவுலகில் தண்மை யளிப்பேன்;
முத்தொழிலும் மண்ணுலகிற் செய்து முடிப்பேன்;
அழியாத தமிழ்மொழியை என்றும் மறவா
அன்போடு கவிபுனைந்து நாட்டிற் களிப்பேன்! 3

கவிச்சிறகால் வானேறிச் சுற்றி வருவேன்;
கண்சிமிட்டும் மீனினத்தைப் பற்றித் தருவேன்!
புவியரசர் யாவரும் எனக்கு நிகரோ?
புவியிலிதை அறியாத மக்கள் உளரோ? 4

## 5. சுதந்தரம்

பட்டே உனக்குக் கட்டி மகிழ்வார்;
பொன்னும் மணியும் புனைவார் உனக்கு;
பாலும் பழமும் சாலக் கொடுப்பார்;
பலபல மொழியினைப் பயிற்றி மகிழ்வார்;
சேல்விழி மாதர் சேர்த்தணைத் துன்றன் 5
சென்னி தடவிச் சிறுநகை பூப்பார்!
ஆயினும், கிளியே! அடிமைநீ கூண்டுள்!
உன்றன் அக்காள் உயிர்க்கா தலனொடு
வானிலே திரிந்து, வாழையில் அமர்ந்து
தென்றலில் ஆடித் தீங்கனி கோதி 10
எங்கும் தனது இருப்பைக் கொண்டாள்!
இரும்புக் கூண்டும், இன்சொல் மாதரும்
சதமா உனக்கு? சொல்லேன் நீதான்?
வானை நோக்கி வாயைத் திறந்தே
'அக்கா!' என்றுநீ அழைத்தழைத்(து) இருந்தால் 15
புதரில் ஆடும் கோவைப்
பழமா சுதந்தரம், பறித்தவள் கொடுக்க? 17

## 6. அகந்தை அற்றுவிட்டால்....?

வானொளி மண்ணில் பாயுதடா! உடல்
வாட்டம் பறந்ததிந் நாட்டினிலே!
நானெனும் அகந்தை அற்றுவிட் டாலொரு
நாளும் பயமில்லை வாழ்வினிலே! 1

'மானம் உயி'ரென்று வாழ்ந்திருந்த பண்டை
மறவர் குடிவழி வந்தவர் நாம்!
கானக் குயிலென விடுதலையாம் வாழ்வில்
களித்துத் திளைத்தினிது வாழ்ந்திருந்தோம்! 2

ஆதியில் நாமோர் மரத்தின் கிளையென
அன்புப் பெருக்கில் தழைத்திருந்தோம்!
சாதி அறிவின்மை பொறாமை எனும்பல
சார்ந்தபின் சக்கை மனிதரானோம்! 3

பலப்பல வழிசென்று ஓரூர் அடைவதைப்
பார்த்தபின் என்செய்தோம்? சற்றுசொல்வீர்!
'இலை-உண்டு' எனும்வாதம் செய்வ தால்புவி
எவ்வழி சென்றதைக் கண்டுவிட்டோம்! 4

எந்நாடும் நம்செயல் கண்டு வியந்திட
ஏற்றவை செய்ய விரைந்தெழுவோம்!
இந்நாடு எம்நாடு எம்பாட்டன் சொத்தெனும்
எண்ணத்தில் மார்பை உயர்த்திடுவோம்! 5

# 7. அதுவே போதும்!

எண்ணுக்கோ விருந்தளிக்கத் தனிமை! நல்ல
எழுத்துக்கோ விருந்தளிக்கத் தென்றற் காற்று!
கண்ணுக்கோ விருந்தளிக்கப் பசுமைக் காடு!
காதுக்கோ விருந்தளிக்கப் புள்ளின் கூட்டம்!
பண்ணுக்கோ விருந்தளிக்க மலையின் சாரற்
பாய்ந்துவரு மெல்லருவி! இணைந்து வாழும்
மண்ணுக்கோ விருந்தளிக்க ஓடி யாடும்
மடச்சிறுவர்! அதுபோதும்! அதுவே போதும்! 1

வான்கொடுக்க மழையுண்டு! மழையைத் தேக்கி
வயல்கொடுக்கக் காலுண்டு! பசிநோய் போக்க,
மீன்கொடுக்க ஆறுண்டு! நன்செய் உண்டு!
மணங்கொடுக்க விரிவண்ணப் பூக்கள் உண்டு!
தேன்கொடுக்க மலையுண்டு! மலையின் பாங்கில்
தினைகொடுக்கப் புனமுண்டு! மக்கட் கென்றும்
நான்கொடுக்க என்வாழ்வாம் உயிரின் மேலாம்
நல்லதமிழ்ப் பாட்டுண்டே! அதுவே போதும்! 2

எள்ளியெள்ளி எனைமாற்றார் பேசி னாலும்,
எனதன்பர் புகழ்ந்தாலும் கவலை யில்லை!
அள்ளியள்ளிக் கொடுத்தாலும், அண்டம் சீட்டி
அளிப்பனெனச் சொன்னாலும் அடிமை யில்லை!
உள்ளத்தில் ஊற்றெடுக்கும் எண்ணத் தேக்கம்
ஒளிப்பதில்லை! கட்டின்றி இச்சை போல
வெள்ளத்தை எதிர்த்தேறும் உள்ளம் உண்டே!
தமிழ்ப்பாட்டாம் வேலுண்டே! அதுவே போதும்! 3

“தேன்பிறந்த செந்தமிழும், தமிழின் ஊற்றும்
செழுங்கலையும், பல்வளனும் செறிந்த இந்த
நான்பிறந்த பொன்னாடும் வாழ வேண்டும்!
நற்றமிழர் பிறராளச் சீற வேண்டும்!
வான்பிறந்த வெண்ணிலவு பொய்கை ஆடி
மலைபிறந்து வருகின்ற தென்றல் போல
ஊன்பிறந்த என்னுயிரைத் தமிழை என்றும்
உதவுகின்ற உரமுண்டே! அதுவே போதும்! 4

# 8. கோலெடுத்தால்...!

கடைத்தெருவின் கோடியிலோர் குரங்கை யாட்டி
கைத்தடியாற் பூமியிலே தாளம் போட்டான்;
மடையுடைந்த மேட்டுவயல் நீரைப் போல
வாய்திறந்தான்; 'தாம்தாம்தை' எனுமி சைத்தேன்
கடைவாயில் வடிந்தின்பம் ஊட்டிற் றங்கே!
கன்னியைப்போல் உடைதரித்த குரங்கங் கொன்றே
இடைநெளித்துக் கண்சுழற்றிக் கையை நீட்டி
எதிராடும் இணையுடனே ஆடக் கண்டேன்! 1

தாழ்ந்ததலை யசைத்தசைத்துப் பேய்வாய்ப் பட்ட
தடிப்பெண்ணைப் போல்மற்றோர் குரங்கு வந்து
வீழ்ந்தெழுந்து நிலைதவறி யாடிற் றங்கே!
மீறிவந்த சிரிப்போடும் இன்பம் பொங்கச்
சூழ்ந்திருந்த மாந்தரெல்லாம் காசைத் தந்தார்!
சொக்கிவிட்டேன்! என்சொல்வேன் கலையி னாற்றை!
ஆழ்ந்தமனக் குரங்கறிவுக் கோலெடுத்தால்
ஆடுமடா சொன்னபடி ஆடுந் தானே! 2

## 9. சொக்கிய நாள் வருமோ?

முற்றம் அறைநிறுவித்—திண்ணை
மெழுகிக் கோலமிட்டுச்
சிற்றில் அமைத்திடுவேன்;—வீதிச்
சிறுவர் என்கூட்டம்! 1

பெற்ற வளைப்போல்நான்—மரப்
பிள்ளைகா லிட்டாட்டி
உற்ற மருந்தளித்துப்—பலப்பல
உணவும் ஊட்டிடுவேன்! 2

உடல் குளிப்பாட்டிப்—பலநிற
உடை அணிபூட்டி
இடையில் தூக்கிவைப்பேன்;—சிரித்து
எடுத்தெடுத் தணைப்பேன்! 3

கூட்டாஞ் சோறாக்கிப்—பலருடன்
கூடி உண்டிடுவேன்;
வாட்டமில் மாப்பிள்ளைபெண்—கடையில்
வாங்கிய பொம்மைகளே! 4

சுத்தச் சுதந்தரத்தில்—பலருடன்
சொக்கிய நாள்வருமோ ?
குத்தி வருத்துதென்னை!—இன்று
கூண்டுக் கிளிநானே! 5

## 10. விரைந்து வா!

என்னை அறியாயோ ?
　　என்னிலையைக் காணுயோ ?
உன்னை விடயார்
　　எனக்குதவி ?—மின்னொளியே!
சங்கத் தமிழ்நூலும்,
　　சான்ருேரும் உண்மையெனில்
எங்கள் குறைநீக்க வா ! 　　1

உண்மையைப் பொய்யென்(று)
　　உரைக்கவரும் தீயோரை
மண்ணில் நிலைக்க
　　விடுவதுவோ?—வண்ணக்
கலாப மயிலே!
　　கவியரசி! வெற்றி
நிலைநிறுத்த வாவிரைந்து நீ! 　　2

பொய்யும் புளுகும்
　　நிறைந்தஇப் பூவுலகிற்
கையிற் பணமில்லாக்
　　காரணத்தால்—தையால்!
பகைமுளைத்த தந்தோ!
　　பகைவீழ்த்தி வெற்றி
நகைபுரிந் தாடு நடம்! 　　3

# 11. போவோம் புதுவைக்கு!

பிள்ளைக்குத் தாய்தகப்பன் முனைந்து சென்றே
பெண்பேசுங் கொடுங்காலம் ஒழிந்தே போச்சு!
கிள்ளையைப்போல் தன்னிணையைத் தேர்ந்தெடுத்தாற்
கேடில்லை; வாழ்க்கைபெறும் இன்பம்! வீட்டின்
உள்வந்தான் ஒன்றுவிட்ட என்றன் தம்பி:
'வேதாந்தம் பேசுகின்றார் பெற்றோர்' என்றான்;
வெள்ளரிபோல் நிறமுடைய கன்னிப் பெண்ணே
வேண்டுமண்ணே, வாபோவோம் புதுவைக்(கு)!' என்றான். 1

கதவருகில் தாய்காட்டக் கண்டோம் ஓர்பெண்!
கைவீசி நடைகாட்டக் கண்டோம் ஓர்பெண்;
விதவிதமாய் ஆடையணி பூண்டங் கோர்பெண்
வேல்விழியைத் தூதனுப்பக் கண்டோம்; பின்னும்
மதயானை மயில்குலத்தைப் பழிக்கும் பெண்கள்
வாய்ப்பாட்டு, பட்டம்சீர் வகைகள் கண்டோம்;
'வதுவர்களை எம்மிடத்தே நாங்கள் என்றும்
வைத்திருப்போம்; சம்மதமோ?' என்றாள் ஓர்தாய். 2

'என்னதொழில்? படிப்பென்ன? உடன்பி றந்தார்
எத்துணைபேர்?' எனவடுக்காய்க் கேட்டான் தந்தை;
'என்னவென்ன அணிதருவீர்? நான்பெண் ணுக்கோ
இதுதருவேன்; அதுதருவேன்' என்றாள் தாயார்;
'என்ன?' வென்றேன்; 'பிடிக்கவில்லை!' என்றான் எம்பி;
எழுந்திருந்தோம்; நடுக்காட்டு முல்லை போலத்
தன்குடிசை வறுமையினால் நான்காண் டாகத்
தவிக்கின்ற ஓர்கன்னிப் பெண்ணைக் கண்டோம். 3

சூதறியா உள்ளத்தை யெடுத்துக் காட்டும்
சொக்குமுகம்; பல்வரிசை புன்னை மொட்டு;
மாதுளையின் பூவிதழ்கள்; பழமே மார்பு;
வளையொலிக்கும் இருகைகள் பசுமை மூங்கில்;
'காதணியுங் கழுத்தணியும் இல்லை; ஆனால்,
கனிவுண்டு; கடமைசெய்வேன்; கொள்வீர்!' என்றே
தூதுவிட்டாள் மைவிழியை; அடடா! அந்தச்
சுந்தரியை விரும்பாத உலகம் என்னே! 4

வறுமையினில் அழகுண்டு; வாய்மை யுண்டு;
வளமையுண்டு; வாய்ப்பேச்சில் இனிமை யுண்டு;
சிறுகுடிசைப் பெருவிருந்து செய்ய வல்ல
திறமுண்டு; பணிவோடு தன்னைக் கொண்டான்
வறுமையிலும் வளமையிலும் ஒன்றாய் என்றும்
மதித்துலகில் வாழ்கின்ற எளிய பெண்ணை
அறியாத அந்தகரை நாட்டை விட்டே
அகற்றினால் விடுதலையே அடைவோம் நாமே! 5

## 12. யார் அவள் ?

கோடி மதிகள்கண்டேன்
கொஞ்சு மவள்முகத்தில்!
ஓடைக் குளிர்மலர்த்தேன்—தோழனே!
உண்(டு)அவள் செவ்வுதட்டில்! 1

கையினில் வீணைகுறள்
காலிற் சிலம்புகண்டேன்!
மெய்யினில் மணிமேகலை!—தோழனே!
வெற்றிவளை தோளிற்கண்டேன்! 2

என்னைப் பிடித்தணைத்தாள்;
இதழ்சுட முத்தந்தந்தாள்!
கன்னியவள் யாரோசொல்—தோழனே!
கள்வெறி யூட்டினவள் ? 3

குளத்துச்செவ் வல்லிமலர்
குலுங்கச் சிரித்ததுபோல்
களங்கமில் புன்முறுவல்—தோழனே!
கண்ணிற் பதிந்ததடா! 4

செகத்தில் உயிர்மயக்கும்
சேல்விழி மின்னல்பாய்ந்தென்
அகத்தைக் கவர்ந்ததடா—தோழனே!
அந்தி அழகொளிபோல்! 5

என்னை அவள்மயக்கில்
என்றென்றும் ஆழ்த்திவிட்டாள்!
கன்னியவள் யாரோசொல்?—தோழனே!
காணேன் விழித்தவுடன்! 6

## 13. ஏனோ ?

அல்லி சிரிக்கும்; நடுங்கும் மரநிழல்;
அழகு நிலவொளி பாயும்;
புல்நுனி ஒளிசெயும்; நன்மணி போலப்
புதுமணம் வீசும் கடம்பு;
நல்லிசை மீட்டும் சல்லிபாய் அருவி;
நாணல் வெண்தலை அசைக்கும்;
'கொல்'லெனச் சிரித்துப் பகலெலாம் களித்த
குளிர்மரை சுருங்கிடல் ஏனோ ? 1

வானிடை முளைக்கும் முழுமதி கண்டே
வாவென் றழைக்கும் குழவி;
போனதை வந்ததைப் பேசி முதியவர்
புத்துணர் வடைகிறார் நெஞ்சில்;
ஊன்மிசை உயிரில் இன்பம், அடடா!
உயர்ந்தது முழுநிலா வானில்!
மானினம் பழிக்கும் கன்னியர் கூட்டம்
வாடி வதங்கிடல் ஏனோ ? 2

சூடகம் ஆர்க்கக் கைத்தலம் கொட்டிச்
சுழல்விழி நகைமுகப் பெண்கள்
பாடுவர் ஆடுவர் பாலொளி கண்டே;
பாட்டியர் பழங்கதை சொல்வார்;
காடையாம் அவனுக் கென்னுளம் கொடுத்தேன்;
களித்தோம்; கண்டனை நிலவே!
வாடுதென் உடலுயிர்! நான்கடைத் தேற
வழிசொலா திருப்பதும் ஏனோ ? 3

# 14. பேசவில்லை!

மாடியிலே நான்படுத்துக் கிடந்தேன்; வேடன்
அடிபட்ட மான்போல வந்தாள்; நின்றாள்!
'ஏடி!உன்றன் முகம்சோங்கிக் கிடக்கு' தென்றேன்!
ஏறிட்டுப் பார்க்காமல் அழுது நின்றாள்!
ஆடையினைப் பிடித்திழுத்தேன்; 'அமர்க' என்றேன்;
அசையவில்லை ஒருசிறிதும்; எழுந்து நின்று,
'பாடினேன் பாட்டொன்று குமரிக் காகப்
படித்துப்பார்!' எனச்சொன்னேன், பேச வில்லை! 1

"ஊற்றிசைக்கும் பாட்டைப்போல் மக்கள் உள்ளம்
ஊடுருவும் குயிலைப்போல் எனது சொந்த
ஆற்றலினால் தமிழ்பாடி உனது நெஞ்சை
அள்ளுகின்ற பாட்டிசைப்பேன்; கலங்கேல்! என்ன
சீற்றமடி என்மீது? வாய்தி றந்து
செப்பாயோ ?' எனக்கெஞ்சி நின்றேன்; என்சொல்
காற்றினிலே போனதடா! அந்தோ! என்றன்
கவிப்பெண்ணாள் என்னுயிராள் பேச வில்லை! 2

'என்னிடத்தைக் கவரவரும் இந்தி தன்னை
உயிர்குடிப்பேன்; எத்தனைபேர் அவளுக் காகத்
தன்மானம் விட்டுவந்து துணைசெய் தாலும்
தவிடுபொடி யாக்கிடுவேன்; அதோபார் நாட்டில்
என்னருமைத் தோழர்களின் அணிவ குப்பை!'
என்றுரைத்தேன்; நானெழுந்தேன் மறவன் போலக்!
கன்னியவள் கடைக்கண்ணாற் சிரித்தாள்! கோவைக்
கனியிதழ்கள் அசைந்தனவே! பேச வில்லை! 3

## 1. இதுவா கைம்மாறு?

சிற்றூரில் நானிருந்தேன்; சிறுவன் வந்தான்;
'காந்தியை ஒருவெறியன் சுட்டான்' என்றான்;
பற்றற்ற அவர்மறைவைக் கேட்டு நெஞ்சம்
பதறினேன்; அசையாத பொருள்கள் யாவும்
சுற்றிற்றென் கண்முன்னே! அந்தோ! மக்கள்
துயர்நீக்க முனைந்தவருக் கிதுகைம் மாறோ?
நற்றாயை இழந்தவரைப் போன்றோம்! நாட்டை
நலிவுறுத்தும் மதவெறியின் கொடுமை காணீர்! 1

'உலகத்தில் அரசியலில் நிலவும் சின்ன
ஒவ்வாத செய்கையினைக் கூர்ந்து நோக்கிக்
கலங்காமல் இடித்துரைத்தான்! யாரே?' என்னில்,
'காந்தி'யென உடனுரைக்கும் சிறிய பிள்ளை!
விலங்காக மதித்துவிட்டான் கோழை கோட்சே!
வெறியனால் உலகின்முன் பழிசு மந்தோம்!
கலங்கரையின் விளக்கவியத் தத்த ளிக்கும்
கலம்வாழ்நர் போல்நாடு கலங்கு தந்தோ! 2

கட்குடியைப் போக்குதற்கும், பிறராற் போட்ட
கால்விலங்கை நீக்குதற்கும் சிறையும் சென்று,
முட்பாட்டை வழியொழித்து மக்கட் காக
முழுநாளைச் செலவழித்த சுடரை, அந்தோ!
எக்காலம் இனிக்காண்போம்? இதுகைம் மாறோ?
இருளுலகிற் கினியாரே விளக்கம் சேர்ப்பார்?
கட்டாகத் தமிழ்நாட்டீர்! முனைந்தெ ழுந்தே
காந்திவழிக் குறைமுடிப்பீர்! மடமை மாயும்! 3

தீண்டாதார் நுழையாத இறையி ருக்கும்
திருக்கோயில், படித்துறைகள் மிதியாத் தீரன்,
வேண்டாத இந்து-முஸ்லீம் பூசல் கல்வி
வேரறுக்க உயிர்கொடுக்கத் துணிந்த செம்மற்(கு)
ஈண்டிதுவோ கைம்மாறு? வெட்கம்! வெட்கம்!
என்னருமைத் தமிழ்நாட்டீர்! ஒன்று சொல்வேன்:
ஆண்டானும் அடிமையும் அற்றால், சாதி
அழிந்தொழியும்; அறிவற்ற செய்கை போமே! 4

## 2. கொடுந்துயரம் அந்தோ!

சிற்றூரில் நானிருந்தேன்; வயல்வெளியைச் சுற்றித்
திரிந்துவரும் போழ்தினிலே, எதிர்வீட்டுப் பையன்
பெற்றாளை இழந்தான்போல் அழுதோடி வந்தான்;
'பேசெ'ன்றேன்; 'கலைவாணர் என்எஸ்கே இன்று
செத்தாராம்!' எனச்சொன்னான்! மரமானேன்; வீசும்
செழுந்தென்றல் வயல்வெளியும் தீச்சுடரே கண்டேன்!
பற்றியதே பெருந்தீயும்! கலையென்ன ஆகும்?
பழமைக்கு வேட்டினிமேல் யார்வைக்கப் போறார்? 1

இடித்தூக்கிச் சிரிப்பூட்டி இழிந்தநிலை கண்முன்
இழுத்துவந்து சிந்திக்க எவர்தூண்டப் போறார்?
கொடுத்துதவ யாருண்டு? தமிழ்நாட்டில் ஏழை
குறைநீக்கிக் காப்பாற்ற யாராலே யாகும்?
படிக்காத நம்நாட்டார் பிறநாட்டார்க் கென்றும்
பகுத்தறிவைச் சிரிப்பாலே தூண்டிவிட்ட அந்த
நொடிப்பெல்லாம் விழியிரண்டும் மறந்திருக்கப் போமோ?
நூறாறு விண்ணிடிகள் தலையில்விழக் கண்டோம்! 2

மண்ணழுமே! வாயெழுந்து மனங்குளிரச் செய்யும்
மறத்தமிழர் தொன்றுதொட்டு வளர்த்துவந்த தீஞ்சொற்
பண்ணழுமே! நொடிப்பழுமே! கலையழுமே! வீரப்
பைந்தமிழர் குடியழுமே! கலங்காத என்றன்
கண்ணழுமே! தமிழ்நாட்டிற் கலைவாணர் போலச்
சிரிப்பாலே கருத்தூட்ட யார்பிறக்கப் போறார்?
பெண்ணழுமே! ஆணழுமே! கிழமழுமே! மாறாப்
பேரிழப்பாம் உலகிற்கே! கொடுந்துயரம் அந்தோ! 3

## 3. யாம் மறக்கப் போமோ?

பிறைநிலவில் செம்புள்ளி போலிருக்கும் நெற்றிப்
பெரும்பொட்டுக் குங்குமமும், ஆன்றுயர்ந்த இன்சொல்
நிறைநிலவு வாய்ச்சிரிப்பும், சிரிக்கின்ற கண்ணும்,
நெடுந்தோளும், உடற்கட்டும், நிலைகுலையா நெஞ்சும்,
குறைநிலவும் பெண்ணினத்தின் முன்னேற்றத் தொண்டும்
கொண்டதுவே தருமாம்பாள் சீர்உருவம்! வாழ்வை
மறைத்ததுவாம் கொடுஞ்சாவு! மக்கட்கோர் ஈட்டி!
மாற்றில்லாப் பேரிழப்பே! யாம்மறக்கப் போமோ? 1

மூதறிஞர் தமிழ்ப்புலவர் மயிலைசிவ முத்தின்
முகக்குறிப்பை நன்குணர்ந்து தமிழ்நாட்டை வாட்டும்
தீதெல்லாம் மாய்ப்பதற்குத் தருமாம்பாள் அன்னாய்!
சிட்டைப்போல் செயல்புரிந்தீர்! செந்தமிழைக் காத்தீர்!
ஓதுகலை மாணவரும் மங்கையரும் ஏங்க
உயிர்நீத்துப் போனீரே! யாம்மறக்கப் போமோ?
காதுக்கோ கொதிஈயம்! கண்ணுக்கோ கொள்ளி!
கற்றோரை, முத்தைஇனி யார்தேற்றப் போறார்? 2

நோய்நாடி, நோய்முதலாம் வகைநாடி, நாட்டில்
நுண்ணறிவின் துணைநாடித், தமிழ்நாடு தந்த
தாய்நாடித், தாய்மாரின் படைநாடி மாற்றாந்
தாய்இந்தி புறங்கண்ட தருமாம்பாள் அன்னாய்!
சேய்நாடிச் செந்தமிழை வளர்க்கின்ற சென்னை
மாணவர்கள் மன்றத்தில் தித்திக்கப் பேசும்
வாய்நாடி யாரினிமேல் உரைகேட்கப் போறார்?
மலர்முகத்து மாமணியே! யாம்மறக்கப் போமோ? 3

கண்ணொத்த தாய்மாரைத், தமிழ்நாட்டுக் காளை
கன்னியரை, மாணவரைப், பெரியோரை என்றும்
பண்ணொத்த மொழிபேசிச் சிரித்துவர வேற்றுப்
பரிந்தழைக்கும் திருஉருவும் நோய்நீக்கும் கையும்
மண்ணொத்துப் போனதுவோ! தமிழ்நாட்டுச் சொத்தே!
மறக்குலத்து மணிவிளக்கே! தருமாம்பாள் அன்னாய்!
புண்ணொத்துப் போனதுவாம் தமிழ்நாட்டார் உள்ளம்!
புத்தொளியைப் புத்துணர்வை இழந்ததந்தோ நாடே! 4

## 4. மண்ணோடு மண்ணானதே!

எங்கோ பிறந்தாய்; வளர்ந்தாய்நீ! எங்களுடன்
தங்கிக் கலந்து பழகினாய்;—எங்கள்
விழியேங்க, நெஞ்சம் மிகவேங்கச் சாவின்
வழிப்போனாய்! யார்பொறுப் பார்? 1

சித்தாந்தம் நீங்கித் திருப்பா திரிப்புலியூர்
'முத்தமிழ்ப் பண்ணை' முதல்வனாய்த்—தித்திக்கப்
பேசிப் பழகும் பெருங்குணத்தோய்! பிச்சையா !
நேசம் மறந்திடுமோ நெஞ்சு ? 2

பச்சைத் தமிழா! பழகமிக ஏற்றவனே!
அச்சம் அறியாப் புலிப்போத்தே!—பிச்சையா!
'அண்ணா!' வெனவழைக்கும் அன்புத் திருவாய்தான்
மண்ணோடு மண்ணான தே! 3

# 1. மறப்பதுண்டோ காதல்?

வான்சுற்றித் திரிகின்ற முகிலினங்கள் தோயும்
மலையுச்சித் தேனடையை மங்கையர்கை வீழ்த்தும்;
தேன்சுற்றி மொய்க்கின்ற வண்டினங்கள் பாடும்;
செம்போத்துப் பெடைவிளிக்கும்; மயிலினங்கள் ஆடும்;
கான்சுற்றி முழவார்க்கும் மலையருவி ஓசை
கழைச்சாரல் எதிரொலிக்கும்! கன்னியர்கண் ஒக்கும்
மான்சுற்றித் தேடுகின்ற வேடுவன்போல் வந்தேன்;
அங்கெல்லாம் உனைக்கண்டேன்! மறப்பதுண்டோ காதல்?

சீலையிட்ட காம்பேரடு வெள்ளாட்டு மந்தை
செடிகொடிகள் மேய்ந்திருக்கும்; கழுத்துமணி ஆர்க்கும்?
ஓலையிட்ட பெருங்குடைக்குள் அடைத்துவைத்த குட்டி
ஓயாது கூச்சலிடும்; குழலூதும் ஆயன்;
பாலையிட்ட உலைநாறும்; காட்டுமலர் நாறும்;
பைம்புதர்கள் இசைமீட்டும்; பகலொளியும் சாயும்;
மாலையிட்ட செவ்வானம் மாலையிட்டுக் காட்டும்!
அங்கெல்லாம் உனைக்கண்டேன்! மறப்பதுண்டோ காதல்?

கன்னியரின் வாயழகை மலர்பூத்த வாவிக்
கரைகாட்டும்; இடையிடையே விழிகாட்டும் நீலம்;
முன்னுயர்ந்த வானத்து வில்லழகைக் காட்டும்
முண்டியெழும் நீர்வாளை; குளம்மூழ்கும் காளை!

மின்னலிடை யாரெல்லாம் குடமேந்தி வந்தார்;
விழியாலே நகைகாட்டி அசைந்தாடிச் சென்றார்!
அன்றின்றும் அழியாத ஓவியமே! வாழ்வே!
அங்கெல்லாம் உனைக்கண்டேன்! மறப்பதுண்டோ காதல்?

அலைபாயும் கடலோரம் வளைபாயும் நண்டு;
பைந்தாழை அருகிருந்தே அடைகாக்கும் பேடை;
வலைபாயும் கடல்மீது படகாடிப் பாயும்;
மணற்பரப்பு நெடுங்கரையில் பொன்பூக்கும் புன்னை!
மலைபாயும் மாஞெக்கும் நெய்தல்வாழ் பெண்கள்
வரிவளைக்கைக் கோலேந்தி வாகுயர்த்தி நிற்பர்;
சிலைபாயும் விழிபாய; இசைபாயும் பேச்சில்!
செந்தமிழே! உனைக்கண்டேன்! மறப்பதுண்டோ காதல்?

## 2. குடியாட்சி

'என்றென்றும் தானரசன் விளைவுதன' தென்றே
ஏப்பமிட்ட முடிமன்னர் முறைகெட்ட ஆட்சி
கொன்றொழித்துக் குடிமக்கள் தாம்தம்மை ஆளக்
கொண்டபெரும் அறச்செயலே குடியாட்சி! வாழ்க!
குன்றுாத்த போர்மறவர் உழைப்பாளர் செல்வர்
குலமகளிர் நல்லறிஞர் கூன்குருடு யார்க்கும்
நன்றிதுவே! தாயகத்தில் வாழுகின்ற மக்கள்
நல்விருப்பப் பெருவாழ்வே நாட்டையர சாளும்! 1

வாழுகின்ற மக்களெலாம் சாதிமத மற்ற
மணிவயிற்றுத் தாயொருத்தி மக்களைப்போல் வாழ்வர்;
சூழுகின்ற இன்பதுன்பம் யாவருக்கும் ஒன்றாம்;
தொகுத்துள்ள சட்டங்கள் பொதுவாகும்; நாட்டின்
தாழ்வெதிர்த்தே இடித்துரைக்கும் சான்றாண்மை ஒவ்வோர்
தனிமனிதன் பிறப்புரிமை; பெயரளவி லின்றி
வாழ்வளிக்கும் நல்லமைச்சர் அரசாளும் நாடே
மாப்புகழ்சேர் குடியாட்சி வாழுகின்ற நாடாம்! 2

'அழியாத பெரும்புகழால் தான்பிறந்த நாட்டை
அயல்நாட்டைப் போலுயர்த்த வில்லை' என்றே ஏசும்
பழிக்கஞ்சும் நல்லமைச்சைத் தேர்ந்தெடுக்கும் மேன்மை
படிப்பில்லா மக்களினால் ஒருபோது மாகா!
அழிவில்லாக் கட்டாயக் கல்வியினை மக்கட்(கு)
அளிப்பதுவும், போர்ப்பயிற்சி அளிப்பதுவும் நாட்டின்
விழியாகும்! தாய்மொழியில் தாய்நாட்டுப் பண்பில்
விழிப்பில்லா அமைச்சாலே பாழாகும் நாடே! 3

குடிமக்கள் கூக்குரலைக் கேட்கின்ற காதும்,
கொடுமையெனில் எதிர்க்கின்ற அஞ்சாத நெஞ்சும்,
நடுநிலைமை குன்றாத குறிக்கோளும், ஆன்ற
நல்லறிவும், அடக்கமும் வாய்த்தோரைத் தேர்ந்தே
எடுக்காத முறையாலே குடியாட்சி பாழாம்!
எவர்குற்றம்? குடிமக்கள் சீர் தூக்காக் குற்றம்!
குடிமக்கள் விழிப்புத்தான் குடியாட்சி மேன்மை!
விழிப்பிலையேல் குடியாட்சி குடியராட்சி யாமே! 4

## 3. தங்கத் தாமரை மலர்ந்ததுவே!

பொங்கும் கடல்மேல் தலைநீட்டிப்
புகுந்த வாடை இருளோட்டிப்
பூவை மலர்த்தி அழகூட்டிப்
பொன்னொளி வீசிக் கைந்நீட்டித்
தங்கத் தாமரை மலர்ந்ததுவே!
தைமுதல் நாளும் பிறந்ததுவே!
தைமுதல் நாளும் பிறந்ததுவே
தமிழர்க் கின்பம் நிறைந்ததுவே!
மங்காத் தமிழர் பெருநாளாம்
வந்த பொங்கல் புதுநாளாம்!
வந்த பொங்கல் புதுநாளாம்
வாழ்வ ளித்த திருநாளாம்!
எங்கும் பொன்னும் பொன்னொளியே!
எழுந்தது பொங்கல் வாழ்த்தொலியே!
எழுந்தது பொங்கல் வாழ்த்தொலியே
இல்லந் தோறும் சிரிப்பொலியே! 1

குட்டை குளங்கள் பூப்பூக்கக்
கொடியும் செடியும் காய்காய்க்கக்
குன்றத் தருவி முழவார்க்கக்
குயிலும் வண்டும் யாழ்சேர்க்கத்
தட்டைப் போல வானெழுந்து
தங்கத் தாமரை மலர்ந்ததுவே!
தங்கத் தாமரை மலர்ந்ததுவே
தமிழர்க் கின்பம் நிறைந்ததுவே!

கொட்டு முழவு குழலோசை
　　கொதிக்கும் பொங்கற் பாலோசை!
　　கொதிக்கும் பொங்கற் பாலோசை
　　குமரிப் பெண்கள் பாட்டோசை!
எட்டுத் திசையும் பாய்ந்ததுவே!
　　இல்லில் இன்பம் நிறைந்ததுவே!
　　இல்லில் இன்பம் நிறைந்ததுவே
　　இதயம் வாழ்த்திக் கலந்ததுவே! 2

## 4. எல்லோரும் செத்தவரோ?

எத்தனையோ மக்கள்
இயற்கை அடைந்தார்கள்!
செத்தவர்கள் எல்லோரும்
செத்தவரோ?—இத்தரையில்
கண்ணப்ப! கற்றறிந்தோர்
கைகள் அவரவர்கள்
கண்ணப்ப வேநெஞ்சங் காண்! 1

பிறப்பதுவும், வாழ்வதுவும்,
பின்னர் உலகில்
இறப்பதுவும் உண்மை:
எனினும்,—மறப்பரிய
கண்ணப்ப! சைவத்துக்
கண்ணப்ப! நீர்பிரிந்தீர்!
கண்ணப்ப வேயிழந் தோம்! 2

# 5. தலைமைக் கவிதை

உலகத்தில் இயற்கையினை அடக்கி மக்கள்
உறுதுணைக்கே பயன்படுத்தும் ஆன்ற செய்கை
பலகலைமா மன்றங்கள் விளைக்கும் ஆற்றல்
பகுத்தறிவாம்! அவ்வறிவை நல்கும் அண்ணா
மலையரசர் பல்கலைமா மன்றம் வாழும்
மாப்புகழ்சேர் துணைவேந்தே! புலமை மிக்கீர்!
விலையில்லாக் கவிதைவிருந் தேற்க வந்த
மேலோரே! உளங்கனிந்த வணக்கம் ஏற்பீர்! 1

தேன்கலந்த செஞ்சொல்லால் தமிழர் நாட்டைச்
சீர்ப்படுத்தும் எதிர்காலக் கவிஞர், என்றன்
ஊன்கலந்த உயிர்கலந்த தமிழால் பாடி
உளங்கவரப் போகின்ற கவிய ரங்கில்,
நான்கலந்து கொள்ளுகின்ற வாய்ப்ப ளித்த
நல்லோரே! முதுபுலவீர்! ஊர்வாழ் மக்காள்!
வான்கலந்த மின்னிடையீர்! இங்குச் சூழ்ந்த
மாணவர்காள்! யாவருக்கும் வணக்கம்! நன்றி! 2

காராடும் நீள்வானம் பொய்த்த போதும்
காத்தளிக்கும் நற்றாயாம் வற்றாப் பொன்னி
நீராடும் தமிழ்நாட்டில் பிறந்த அண்ணா
மலையரசர் மலையரசர் நினைவால் கல்விச்
சீராடும் பல்கலைசேர் கழகம் கண்டார்;
செந்தமிழ்போல் நீள்புகழைக் கண்டார்! அன்னார்
பேராடும் பல்கலைமா மன்றம் நாட்டில்
பெறற்கரிய பெரும்பேறே! வாழ்க! வாழ்க! 3

மலைபிறந்த முத்தருவி குறிஞ்சி முல்லை
மருதம்நீள் பாலைநெய்தல் ஊட்டும் அண்ணா
மலைபிறந்த முத்தய்யா அரசர் 'கெட்டி
முத்தய்யா' எனமக்கள் வாயார்ந்(து) ஏற்றக்
கலைபிறந்த குடிப்பிறந்து தந்தை போலக்
கடல்சூழ்ந்த தென்னாடும் வேற்று நாடும்
குலைபிறந்த முக்கனியும் தேனும் போலக்
கொடுத்துதவி வாழ்கின்றார்! வாழ்க நீடே! 4

கலைசூழ்ந்த எதிர்காலத் தமிழர் நாட்டுக்
கன்னியரைக் காளையரை விளைத்து முந்நீர்
அலைசூழ்ந்த் திருநாட்டை ஈன்ற நாட்டை
ஆளுகின்ற அறிவியலை விளைக்கும் அண்ணா
மலைசூழ்ந்த பல்கலையை நடத்தும் வாய்மை
மறத்தமிழர் துணைவேந்தர் நேர்மை யாளர்
விலைசூழ்ந்த ஒளிமணியாம் திருச்சி நாரா
யணசாமி விரிபுகழ்சேர் இனியர்! வாழ்க! 5

பான்பிறந்த செங்கதிராம் இராம நாதர்
ம்ண்டிதமா மணிவழியோர்; வித்த கர்;செந்
தேன்பிறந்த தீஞ்சொல்லார்; குளிர்ந்த நோக்கார்;
சிரித்துவர வேற்கின்ற அரிய செம்மல்;
கான்பிறந்த பூவாடிச் சோலை தங்கிக்
களிப்பூட்ட வருகின்ற தென்றற் காற்று;
'நான்பிறந்தேன் தமிழுக்கே' என்றே வாழும்
நல்லறிஞர்; தமிழ்க்கடலாம்! வாழ்க! வாழ்க! 6

திருவாலே அழியாத திருவைச் சேர்க்கும்
செயல்புரிந்தார் மலையரசர்; அன்னோர் உள்ளக்
கருவாகி உருவாகி வளத்தை நல்கும்
பல்கலைமா மன்றத்தில் கற்போர் தம்மை
உருவாக்கும் திருஇராம நாதர் அண்ணா
மலைகவரும் சான்றோரை உதவு கின்றார்!
பெருகஅவர் நற்றொண்டு! வாழ்க! அண்ணா
மலைக்கவரும் தம்பியரும் பின்விட் டாரே! 7

விண்தாவும் நீள்தென்னை விரிந்த பாளை
வெண்குருகென் றேசேல்கள் நீரில் தாவும்;
மண்தாவும் நெற்கதிர்கள்; பழுத்த வாழை
மரம்தாவும் வயல்பூத்த கரும்பின்மீது;
பண்தாவும் சோலையிலே பாடும் வண்டு
பனிமலரின் மேல்தாவும்; காணும் மக்கள்
கண்தாவும் மணிமாடத் தில்லை அண்ணா
மலைநகரத் தமிழ்மன்றில் கவிய ரங்கில்! 8

கல்தோன்றி மண்தோன்றாப் பழங்கா லத்துக்
குடிவழியில் வாழ்ந்தபெரும் கவிஞர் கூட்டம்
சொல்தோன்ற இலக்கியமும் யாப்பும் தோன்றச்
சுவைமிகுக்கும் செந்தமிழை உயிரை வாழ்வை
எல்தோன்றி எழுகின்ற ஒளியைப் போல
என்றென்றும் நிலைத்திருக்கப் படைக்க லானார்!
அல்தோன்றும் வெண்ணிலவே கவிஞர் கூட்டம்!
அவர்புகழோ வெண்ணிலவே! பாடக் கேளீர்! 9

## 6. பாரிக்குத் தாலாட்டு

சீர்மேவும் கீழ்வானில்
சீய்த்தெழுந்த செஞ்சுடரே!
கார்மேவும் குன்றம்
தவழ்ந்துவரும் மென்காற்றே! 1

உச்சிமலைத் தேனே!
உயர்சாரல் நீரருவி!
பச்சைமலைப் பாறை
பயிலும் புலிக்குட்டி! 2

சாரல் மலைவாழும்
சந்தனமே! காரகிலே!
வேரில் பழுத்த
பலாவே! விடிவானே! 3

பிள்ளைக் குறைதீரப்
பிறந்தவனே! பேரழகே!
வள்ளலே! பாரி
மகனே! நீ கண்ணுறங்கு! 4

கொம்பு முளைக்காத
கொல்லேறே! என்னுயிரே!
செம்பொன் மருதத்
திருவே! சிறுகிளியே! 5

தீங்கரும்பே! சாறே!
செழுவாழை மாங்கனியே!
ஓங்கி வளர்தென்னை
உச்சி இளநீரே! 6

கார்நிறைந்த ஊருணியே!
கண்கவரும் தாமரையே
சீர்நிறைந்த செம்பொன்!
சிறுசிலையே! ஓவியமே! 7

இல்லத்து மாமணியே!
ஏன்மகனே! பாரியே!
செல்வத்துட் செல்வமே!
செந்தமிழே! கண்ணுறங்கு! 8

வெண்கலப் பாலடையால்
வேணமட்டும் பாலுண்டாய்!
கண்கலங்கக் கூடாதே
கண்மணியே! கண்ணுறங்கு! 9

பாட்டி மனம்நோகும்;
பாட்டன்மார் கண்சிவக்கும்;
தீட்டா ஒளிக்கல்லே!
செல்வமே! கண்ணுறங்கு! 10

நம்பி மகனே!என்
நற்றமிழே! நீயழுதால்
வம்புரைக்கும் மாற்றாரின்
வாயடைக்க உன்னப்பா 11

ஊரூராய்ச் சென்றே
    உரைநிகழ்த்த ஒப்புவரோ?
காராடும் வானக்
    கவினே! கலித்தொகையே! 12

தேன்பாகே! சின்னஞ்
    சிறுபயலே! நீயழுதால்
நான்பள்ளிப் பாடம்
    நடத்த முயல்வதெப்போ? 13

நீலவிழி நீர்சிந்தி
    நீயழுது கொண்டிருந்தால்
கோலக் குயில்கூகும்;
    கொஞ்சு மொழிநல்லார் 14

அத்தைமார் இட்ட
    அழகுவிழி மைகரையும்;
சித்திமார் நெற்றியிட்ட
    செம்பொட் டொளியிழக்கும்; 15

அம்மான்மார் தைத்திட்ட
    ஆடை நலங்குலையும்!
செம்பொன்னே! கண்ணே!
    சிணுங்காதே! கண்ணுறங்கு! 16

மால்யானைக் கொம்பொடித்து
    மாற்றார் படைநொறுக்கிப்
கால்கடைந்து செய்த
    கலைவிளக்கும் தொட்டிலிலே 17

அந்நாளில் பிள்ளை
அயர்ந்துறங்கக் கேட்டதுண்டே!
இந்நாளில் தென்னவரோ,
என்மகனே! பாரியே! 18

செந்நெல் விளைவிருந்தும்
தெங்கிருந்தும் மாவிருந்தும்
கன்னல் விளைவிருந்தும்
காடிருந்தும் வீடிருந்தும் 19

கையில்லா ஊமையர்போல்
கால்வயிற்றுக் கெட்டாது
வையத்தார் ஏச
வடக்குக் கடிமைகளாம்! 20

தாய்நாட்டை நீபிறந்த
இந்நாட்டை உன்நாட்டைப்
பாய்புலியே! மீட்கப்
பயிலுமிட மோதொட்டில்? 21

'எத்தனைநாள் இன்னும்
அடிமைநாம்' என்றோநீ
கத்தி அழுகின்றாய்?
கைகால் உதைக்கின்றாய்? 22

அண்ணா வழிவந்தோர்
ஆண்சிங்கத் தம்பிமார்கள்
எண்ணா யிரம்பேர்
இருக்கின்றார்; கண்ணுறங்கே! 23

# 7. வாழ்வீர்!

கடல்சூழ்ந்த தென்னிலங்கைத் தமிழ மக்காள்!
கடல்கடந்த என்னினத்தீர்! உங்கட் கென்றன்
மடலாகும் தமிழ்க்கவிதை விடுக்கும் முன்னர்
வாயார்ந்த என்வணக்கம் விடுத்தேன்; ஏற்பீர்!
உடலாகும் உயிரொத்த தாய கத்தை,
உயர்மொழியாம் தமிழ்மொழியை, உங்கள் வாழ்வைத்
தொடரவரும் பகைவீழ்த்தி, அறத்தை ஓம்பித்
தொல்புகழை நிலைநாட்டி வாழ்வீர் நீடே!

## 8. நன்றி உங்கள் வருகைக்கு!

வான்நோக்கிச் செங்கதிரோன் வருதல் உண்மை!
மலர்நோக்கித் தேன்வண்டு வருதல் உண்மை!
கான்நோக்கிப் புள்ளினங்கள் வருதல் உண்மை!
கடல்நோக்கிச் சிற்றாறும் வருதல் உண்மை!
தேன்தேக்கும் பெரும்புலவர் பாடல் கேட்டுத்
திசையுள்ளோர் அவர்நாடி வருதல் உண்மை!
நான்கண்டேன் மயிலைசிவ முத்து மேலோய்!
நன்றியுங்கள் வருகைக்கு! நன்றி! நன்றி! 1

கடல்சூழ்ந்த தமிழ்நாட்டைத் தந்தை நாட்டைக்
கனிமொழியாம் தாய்மொழியைத் தமிழை உங்கள்
உடலுயிர்போல் நனியோம்பி வருதல் கண்டேன்!
உயர்கஉங்கள் தமிழ்த்தொண்டு! தடியை ஊன்றும்
அடலேறே! மயிலைசிவ முத்தே! வாழ்க!
அருந்தமிழின் பெருவாழ்வே தமிழர் வாழ்வாம்!
படர்ந்தவிருட் பகைவீழ்த்தி முன்னோர் வாழ்ந்த
பைந்தமிழர் நாடடைவோம்! வாழ்வோம் நீடே! 2

பண்டிருந்த தமிழ்வாழ்வை எண்ணிப் பார்ப்போம்!
பழந்தமிழர் பெருநூல்கள் படித்துப் பார்ப்போம்!
வண்டலிடு காவிரியின் வளத்தைப் பார்ப்போம்!
மறத்தமிழர் வரலாற்றை நினைத்துப் பார்ப்போம்!
எண்டிசையும் புகழ்வளர்த்த நமது முன்னோர்
இன்றில்லை என்றாலும், அவர்கள் என்றும்
கொண்டிருந்த தமிழ்ப்பற்று நாட்டுப் பற்றுக்
கொண்டிடுவோம்! நாடடைவோம்! வாழ்வோம் நீடே! 3

## 9. எங்கள் அண்ணா!

வாவிநிகர் தாமரைபோல் முகத்தோன் அண்ணா!
வளர்பரிதி! தமிழ்மக்கள் அகத்தோன் அண்ணா!
காவிப்பல் இளநகையோன் எங்கள் அண்ணா!
கருத்தாழப் பேச்சுடையோன் எங்கள் அண்ணா!
தாவிவரும் குழந்தைபோல் இனியன் அண்ணா!
தமிழ்ப்பகைவர் நடுநடுங்கும் கொடியோன் அண்ணா!
பூவிலுறை நறுந்தாதை மணத்தை நல்கும்
புதுத்தென்றல், தமிழ்த்தென்றல் எங்கள் அண்ணா! 1

புன்னைவளர் கடல்முத்தம் எங்கள் அண்ணா!
புத்துலகத் தமிழ்ச்சிற்பி எங்கள் அண்ணா!
கன்னல்சேர் செஞ்சொல்லான் எங்கள் அண்ணா!
காரிருளுக் கொளிசெய்வோன் எங்கள் அண்ணா!
தென்னகத்துத் தனித்தலைவன் எங்கள் அண்ணா!
திராவிடத்துப் பேரறிஞன் எங்கள் அண்ணா!
செந்நெல்சூழ் திராவிடத்தை மீட்க இந்நாள்
திரண்டெழுந்த போர்ப்படையின் தலைவன் அண்ணா! 2

நற்றமிழர் வாழ்விற்கே உழைக்கும் அண்ணா!
நமையேய்க்கும் நரிகளுக்குப் புலிப்போத்(து) அண்ணா!
கற்றறிந்த புலவரெலாம் வியக்கும் அண்ணா!
கம்பரச மயக்கத்தைப் போக்கும் அண்ணா!
கொற்றத்தார் சுற்றத்தார் எனினும் அன்னார்
குறைகாணின் இடித்துரைக்கும் அறிஞர் அண்ணா!
பெற்றெடுத்த தாய்நாட்டின் அடிமை நீக்கும்
பெரும்படையின் புலிக்கூட்டத் தலைவன் அண்ணா! 3

கொல்லேறு தமிழ்ப்பகைவர்க் கெங்கள் அண்ணா!
குளிர்விழியோன், கனிவுடையோன் எங்கள் அண்ணா!
கல்லார்க்கும் கற்றவர்க்கும் புரியும் வண்ணம்
கருத்துரைக்க அரசியலில் வல்லோன் அண்ணா!
சொல்லாலும் எழுத்தாலும் தமிழர் நாட்டின்
துயர்களையக் காஞ்சிதந்த தூயோன் அண்ணா!
மல்லாரும் தோளுடையான், தமிழர் உள்ளம்
வாழ்ந்திடுவோன் எமதண்ணா! வாழ்க நீடே! 4

# 10. கலைஞர் வாழ்க!

அலைகடலின் மலைமுகட்டில் தொடுவா னத்தில்
அதிகாலைப் பொற்றுகளை விண்ணில் தூவித்
தலைநிமிரும் இளம்பரிதி எங்க ளண்ணா
தமிழர்களின் தனித்தலைவன் வழியில் வந்த
கலைஞ!கரு ணாநிதியே! சொல்லின் செல்வ!
களங்கண்ட மறப்புலியே! தமிழர் வாழ்வே!
விலையில்லாத் தாயகத்தின் இருளைப் போக்கும்
விண்ணொளியே! தமிழ்மறவ! வாழ்க நீடே! 1

தம்பிகளில் தலைசிறந்த கலைஞர் ஏறே!
தமிழ்நாட்டு மலைச்சாரல் குளிர்பூங் காற்றே!
கொம்புத்தேன் பேச்சாள! கடலா ழத்தே
குளித்தெடுத்த நன்முத்தே! பகையை வீழ்த்தும்
அம்பொத்த செயல்மறவ! சங்க கால
ஆன்றோரின் புறப்பாட்டே! இளைஞர் நெஞ்சில்
தெம்பேற்றும் எழுத்தாள! தமிழர் வாழ்வின்
திருவே!கரு ணாநிதியே! வாழ்க நீடே! 2

## 11. பாரி வாழ்க!

பொன்னே! புதுவாழ்வே!
புத்தமிழ் தே!பாரி!
கன்னல் சுவையீன்ற
கற்கண்டே!—மன்னிக்
குலச்சுடராய் நின்று
குடிப்புகழை நாட்டி
நிலவுலகில் வாழ்க நிலைத்து! 1

பிள்ளைக் குறைதீரப்
பிறந்த சிறுபுலியே!
கிள்ளையே! பாரி!
சிறுகுழந்தாய்!—வெள்ளமிகு
பொன்னிப்பே ராற்றுப்
பொடிமணல்போல் பல்லாண்டு
மன்னிநீ வாழ்க மகிழ்ந்து! 2

நம்பிதிரு மகனே!
நலலாள லலிதாவின்
அன்பின் விளைவே!
அருந்தமிழர்—இன்ப
இலக்கியமே! பாரியே!
என்றென்றும் நாட்டில்
தலைசிறந்து வாழ்க தழைத்து! 3

